எ-து—இரந்தண்டாயினுங் கற்றல் மிகவினிது; கல்விகள் கல்லின் முன்னர்த் தமக்கு வந்துதவுதன் மிகவினிது; முத்தையொக்கும் நகை யினையுடையார் மெல்லியசொல் இனிது; அதுபோலத் தெளியவும் இனிது மேலாயாரைச் சேர்தல்; எ-று.

* இஃது சங்கத்தாராற் றெருக்கப்பட்ட பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று.



௩. உடையான் வழக்கினி தொப்ப முடிந்தான்
மனைவாழ்க்கை முன்னினிது மாணுதா மாயி
னிலையாமை நோக்கி நெடியார் துறத்த
றலையாகத் தானினிது நன்கு.

எ-து—பொருளுடையானது வண்மை இனிது; மனையாளுள்ளமுங் கொழுநனுள்ளமும் வேறுபடாதுபொருந்தின் மனைவாழ்க்கை மிகவினிது; மாட்சிமைப்படாதாயின் நிலையாமையை ஆராய்ந்து நீட்டியாதே துறத்தல் தலைப்பட மிகவினிது; எ-று. (௩)

௪. ஏவது மாறா விளங்கிளைமை முன்னினிதே
நாளு நவைபோகான் கற்றன் மிகவினிதே
யேருடையான் வேளாண்மை தானினி தாங்கினிதே
தேரிற்கோ ணட்புத் திசைக்கு.

எ-து—வலியது செயயும் இளங்கிளைமை ஒருவற்கு மிகவினிது, குற்றங்களிற் செல்லாது நாடோறுங் கற்றல் மிகவினிது; ஏருடையான் வேளாண்மை இனிது, அதுபோல இனிது தான் செல்லுந் திசைக்கு ஆராயின் நட்புகோடல்; எ-று.

(ச)

ரு. யானை யுடைபபடை காண்டன் மிகவினிதே
யூனைத்தின் றானைப பெருககாமை முன்னினிதே
கான்யாற் றடைகரை யூரினி தாஙகினிதே
மான முடையார் மதிபபு.

எ-து—யானைகளையுடைய சேனையைக காண்டல் மிகவினிது; பிறிதொன்றூனைத் தின்று தன்னூனைப் பெருக்காமை மிகவினிது; காட்டி யாற்றுக் கரைமருஙகினூர் இனிது, அவைபோல இனிது மானமுடையார் நினைப்பு; எ-று.

(ரு)

சு. கொல்லாமை முன்னினிது கோல்கோடி மாராயன்
செய்யாமை முன்னினிது செங்கோல னுகுத
லெய்துந் திறத்தா லினிதென்ப யார்மாட்டும
பொல்லாங் குரையாமை நன்கு.

எ-து—ஒருயிரைக் கொல்லாமை மிகவினிது; அரசன் கோல் செய்யாமை மிகவினிது; மற்றவன் செங்கோலனுகுதல் மிகவினிது யாட்டும் எய்துந்திறத்தாற் பொல்லாங்குரையாமை மிகவினிது; எ-

எ. ஆற்றுந் துணையா லறஞ்செய்கை முன்னினிதே
பாற்பட்டார் கூறும் பயமொழி மாண்பினிதே
வாய்ப்புடைய ராகி வலவைக ளல்லாரைக்
காப்படையக் கோட லினிது.

எ-து—தமக்கியலுமளவினால் அறஞ்செய்கை மிகவுமினிது; நெறிப் பட்டார் சொல்லும் பயனையுடைய சொல்லினினிமைஇனிது; பழுதிலாகி நாணிலிகளல்லாதாரைக் காப்பாகப் பொருந்தக்கோடல் இனிது; எ-று. (எ)

அ. அந்தண ரோத்துடைமை யாற்ற மிகவினிதே
பந்த முடையான் படையாண்மை முன்னினிதே
தந்தையே யாயினுந் தானடங்கா னாகுமேற்
கொண்டடையா னாக லினிது.

எ-து—மறையவர்க்கு ஓத்துடைமை நிரம்ப மிகவினிது; சுற்றமுடை யான் படைகொண்டு செயயும் ஆண்மை மிகவினிது; தாதையேயாயினும் அவனடங்கானாயின் அவனைக் கொண்டடையானாகல் இனிது; எ-று. (அ)

௯. ஊருங் கலிமா வுரனுடைமை முன்னினிதே

தார்புனை மன்னர் தமக்குற்ற வெஞ்சமத்துக்
கார்வரை யானைக் கதங்காண்டன் முன்னினிதே
யார்வ முடையவ ராற்றவு நல்லவை
பேதுறார் கேட்ட லினிது.

எ-து—தான் நடாத்துகின்ற மிக்கமா வலியுடைமை மிகவினிது; தார்புனையுமன்னர் தமக்குற்ற செருக்களத்துக் கார்வரையைப்போன்ற யானையினது வெகுளியைக் காண்டல் அவர்க்கு மிகவினிது ; எல்லா உயிர் கண்மேலும் மிகவும் அன்புடையார் நல்லகேள்விகளை மயக்கமுறாது கேட் டல் இனிது ; எ-று. (கூ)

கo. தங்க ணமர்புடையார் தாம்வாழ்தன் முன்னினிதே
யங்கண் விசும்பி னகனிலாக் காண்பினிதே
பங்கமில் செய்கைய ராகிப் பரிந்தியார்க்கு
மன்புடைய ராத லினிது.

எ-து—தம்மாட்டுச் சேர்வுடையார்தாஞ் செல்வமுடையாதன் மிக வினிது ; அங்கண் விசும்பின்கண்விரிந்த நிலாக்காண்டல் இனிது; குற்ற மில் செய்கையராகிப் பரிந்தியாவர்க்கும் அன்புடையாதல் இனிது; எ-று.



கக. கடமுண்டு வாழாமை காண்ட லினிதே
நிறைமாண்பில் பெண்டிரை நீக்க லினிதே

மனைமாண் பிலாதவரை யஞ்சி யகற
லெனைமாண்புந் தானினிது நன்கு.

எ-து—தனிசுகொண்டு உண்டுவாழாமை காண்டல் இனிது; நிறையினன் மாட்சிமையில்லாத பெண்டிரை நீக்கல் இனிது; மனத்தின்கண் மாட்சிமையில்லாதவரை அஞ்சிநீங்குதல் எல்லா மாட்சிமையினும் மிக இனிது; எ-று.
(கக)

கஉ. அதர்சென்று வாழாமை யாற்ற வினிதே
குதர்சென்று கொள்ளாத கூர்மை யினிதே
யுயிர்சென்று தாம்படினு முண்ணார்கைத் துண்ணாப்
பெருமைபோற் பீடுடைய தில்.

எ-து—வழிபோய் முயன்று வாழாமை மிகவினிது; யாதானும் ஒரு நூற்குப் பொருளைக் கோட்டிக்கொள்ளாத கூர்மை யினிது; பசியான் உயிர் இறந்துபடினும் உண்ணப்படாதார் கையினுணவை உண்ணாத பெருமைபோலப் பெருமையுடையதில்லை; எ-று.
(கஉ)

கங. குழவி பிணியின்றி வாழ்த லினிதே
கழறு மவையஞ்சான் கல்வி யினிதே
மயரிக ளல்லாதார் மாண்புடையார்ச் சேருந்
திருவுந்தீர் வின்றே லினிது.

எ-து—குழவிகள் பிணியுறாது வாழ்தல் இனிது; செவ்விய பொருள் சொல்லினுங் கழறுமவையத்தாரை அஞ்சாதுநின்று

சொல்லுங் கல்வி இனிது ; மயக்கமுடையரல்லாராய் மாட்சிமையுடையாரை அடையுஞ் செல் வமும் நீங்காதாயின் இனிது ; எ-று. (கந)

கச. மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே
தான மழியாமைத் தானடங்கி வாழ்வினிதே
யூனமொன் றின்றி யுயர்ந்த பொருளுடைமை
மானிடவர்க் கெல்லா மினிது.

எ-து—தனக்கு மானமழிந்தபின் உயிர்வாழாமை இனிது ; தானி ருந்துவாழும் இருப்புச்சிதையாவகை தானடங்கிவாழ்தல் இனிது ; குற்ற மொன்றின்றி மிக்க பொருளுடைமை எல்லாமக்கட்கும் இனிது ; எ-று (கச)



ஞ

கரு. குழவி தளர்நடை காண்ட லினிதே
யவர்மழலை கேட்ட லமிழ்தி னினிதே
வினையுடையான் வந்தடைந்து வெய்து றும் போழ்து
மனனஞ்சா னாக லினிது.

எ-து—குழ்விகள் தளர்நடையைக் காண்டல் இனிது ; அவர் மழலைச் சொல்லைக் கேட்டல் அமிழ்துபோல மிகவும் இனிது ; வினைகிழவன் வந்து சேர்ந்து தான் வெம்மையுறும்பொழுது

மனத்தின்கண் அஞ்சாது நிற்றல் இனிது. எ-று;
(கரு)

கசு. பிறர்மனை பின்னோக்காப் பீடினி தாற்ற
வறனுழக்கும் பைங்கூழ்க்கு வான்சோர் வினிதே
மறமன்னர் தங்கடையுள் மாமலைபோல் யானை
மதமுழக்கங் கேட்ட லினிது.

எ-து—பிறனுடைய மனையாளைப் பின்பு பாராத பெருமை மிகவும் இனிது; நீரின்றி வருந்தும் பைங்கூழ்க்கு மழைசொரித லினிது; வீரத்தையுடைய மன்னர்தம் வாயிற்கணுடைப் பெரிய மலைபோன்றிருந்த யானைகளது களிப்பான முழக்கங் கேட்டன் மன்னர்க்கினிது; எ-று (கசு)

கஎ. கற்றார்முற் கல்வி யுரைத்தன் மிகவினிதே
மிக்காரைச் சேர்தன் மிகமாண முன்னினிதே
யெட்டுணை யானு மிரவாது தானீத
லெத்துணையு மாற்ற வினிது.

எ-து—கற்றார் முன்பு தங்கல்வியைச் சொல்லி ஏற்றுதல் மிகவினிது; மிக்க அறிவுடையாரைச் சேர்தன் மாட்சிமைப்பட இனிது; எள்ளளவாயினும் இரவாது தான் பிறர்க்கீதல் எல்லாவாற்றானும் இனிது; எ-று. (கஎ)

கஅ. * நட்டார்க்கு நல்ல செயலினி தெத்துணையு
மொட்டாரை யொட்டிக் கொளலதனின் முன்னினிதே
பற்பல தானியத்த தாகிப் பலருடையு
மெய்த்துணையுஞ் சோர வினிது.

கக. மன்றின் முழுமக்கள் வாழும் பதியினிதே
தந்திரத்தின் வாழுந் தவசிகண் மாண்பினிதே

---

* இச்சங்கத்திற்குக் கிடைத்த பிரதியில் இப்பாட்டிற்கு உரை காணப் படவில்லை.

சு இனியதுநாற்பது மூலமும் உரையும்.

யெஞ்சா விழுச்சீ ரிருமுது மக்களைக்
கண்டெழுதல் காலை யினிது.

எ-து—அம்பலத்தின்கண் அறிவுடையார் வாழும் பதி இனிது; தத் தம் நூல்களிற் சொன்ன நெறியானே வாழும் அருந்தவாது மாட்சியி னிது; குறையாத விழுமிய சீரையுடைய இருமுதுமக்களைக் காலையின் கட் டொழுதெழுதல் இனிது; எ-று. (கக)

உ0. நட்டார்ப் புறங்கூறான் வாழ்த லினியினிதே
பட்டாங்கு பேணிப் பணிந்தொழுகன் முன்னினிதே
முட்டில் பெரும்பொரு ளாக்கியக்கான் மற்றது
தக்குழி யீத லினிது.

எ-து—உற்ருரைப் பழிகூருது வாழ்தல் மிகவினிது ; உண்மையாய நெறியினை விரும்பி யாவரையும் பணிந்தொழுகுதல் மிகவினிது ; குறை யிலாத பெரும்பொருள்களைத் தேடியவிடத்து அஃபொருளைத் தகுதி யுடையார்க்குக் கொடுத்தல் இனிது ; எ-று. (உ0)

உக. சலவரைச் சாரா விடுத லினிதே
புலவர்தம் வாய்மொழி போற்ற லினிதே
மலர்தலை ஞாலத்து மன்னுயிர்க் கெல்லாந்
தகுதியால் வாழ்த லினிது.

எ-து—வஞ்சகரை அடையாதொழுகுதல் இனிது ; அறிவுடையார் வாய்மொழியைப் போற்றிக்கோடல் இனிது ; அகன்ற இடத்தையுடைய ஞாலத்து வாழுமுயிர்க்கெல்லாம் தகுதிப்பட ஒழுகுதல் இனிது ; எ-று. சலவர்—வஞ்சகர்
(உக)

உஉ. பிறன்மனைப் பொருள்வெளவான் வாழ்த லினிதே
யறம்புரிந் தல்லவை நீக்க லினிதே
மறந்தேயு மாணு மயரிகட் சேராத்
திறந்தெரிந்து வாழ்த லினிது.

எ-து—பிறன்கைப் பொருள் வெளவாது வாழ்தல் இனிது ;

அறத்தைச் செய்து பாவங்களை நீக்குதல் இனிது ; மறந்தாயினும் மாட்சிமைப் படாத அறிவில்லாரைச் சேராத் திறங்களைத் தெரிந்துவாழ்தல் இனிது; எ-று.
(உஉ)

## இனியதுநாற்பது மூலமும் உரையும்.

ஷ.

உ௩. வருவா யறிந்து வழங்க லினிதே
யொருவர்பாங் காகாத வூக்க மினிதே
பெருவகைத் தாயினும் பெட்டவை செய்யார்
திரிபின்றி வாழ்த லினிது.

எ- து—தனக்குப் பொருள்வருவாயை அறிந்துகொடுத்தல் இனிது; ஒருவர்க்குச் சார்வாகாத ஊக்கம் இனிது ; பெரிய பயனையுடைத்தாயினும் தாம் நினைந்தவற்றை ஆராயாதுசெய்யாது இயற்கையான் வாழ்தல் இனிது ; எ-று.
(உ௩)

உச. காவோ டறக்குளந் தொட்டன் மிகவினிதே
யாவோடு பொன்னீந் தணர்க்கு முன்னினிதே
பாவமு மஞ்சாராய்ப் பற்றுந் தொழின்மொழிச்
சூதரைச் சேர்த லினிது.

எ-து—காவினையும் ஆக்கிக் குளத்தினையுந் தொட்டல் மிகவும் இனிது ;ஆவும் பொன்னும் அந்தணர்க்கீதல் மிகவும் இனிது ; பாவத்தையுமஞ்சாது பொருண்மேற்பற்றுந் தொழிலையும் மொழியையுமுடைய சூதரை நீக்கல் இனிது ; எ-று. (உச)

உரு. வெல்வது வேண்டி வெகுளாதா னோன்பினிதே
யொல்லுந் துணையுமொன் றுய்ப்பான் பொறையினிதே
யில்லது காமுற் றிரங்கி யிடர்ப்படார்
செய்வது செய்த லினிது.

எ-து —தான் வெல்வதனை வேண்டிப் பிறரோடு வெகுளாதான் பொறை இனிது ; தனக்கியலுமளவு மேற்கொண்டதொன்றை நடாத்து வானாற்றல் இனிது ; தனக்கில்லையதனைக் காதலித்து இரங்கியிடர்ப்படாது இயல்வதனைச்செய்தல் இனிது ; எ-று. (உரு)

உசு. ஐவாய வேட்கை யவாவடக்கன் முன்னினிதே
கைவாய்ப் பொருள்பெறினுங் கல்லார்கட் டீர்வினிதே
நில்லாத காட்சி நிறையின் மனிதரைப்
புல்லா விடுத லினிது.

எ-து—ஐம்பொறியுடைய வேட்கையையும் அவாவினையும் அடக்கல் மிகவினிது : தன் கையின்கண்ணே பொருள் பெறினும் கல்லாதாரை

விடுதலினிது; நிலையில்லாத அறிவையுடைய திண்மையில்லாத மக்களை மேவாது விடுதல் இனிது; எ-று.
(உசு)

உஎ. நச்சித்தற் சென்றார் நசைகொல்லா மாண்பினிதே
யுட்கில் வழிவாழா வூக்க மிகவினிதே
யெத்திறத் தானு மியைவ கரவாத
பற்றினிற் பாங்கினிய தில்.

எ-து—தன்னை நச் சிச்சென்றார் நசையைச சிதையாத மாண்பினிது; தன்னை மதிப்பில்லாதவிடத்து வாழாத வுள்ளம் மிகவினிது; எப்பெற்றி யாயினுங் பிறர்க்குக் கொடுக்கப்பொருநதுவதனைக் கரவாத மனைவாழ்வு போல நன்றாகவினியது பிறிதில்லை; எ-று. (உஎ)

உஅ. தானங் கொடுப்பான் றகையாண்மை முன்னினிதே
மானம் படவரின் வாழாமை முன்னினிதே
யூனங்கொண் டாடா ருறுதி யுடையவை
கோண்முறையாற் கோட லினிது.

எ-து—தானஞ் செயவானது தகுதியது தலைமை இனிது; மானங் கெடவந்தாயின் உயிர் வாழாமை மிக வினிது;

குற்றங்கொண்டாடாது நன்மையுடையனவற்றை மனத்திற் கொள்ளு முறைமையாற் கோடல் இனிது ; எ-று.
(உஅ)

உகூ. ஆற்றானை யாற்றென் றலையாமை முன்னினிதே
கூற்றம் வரவுண்மை சிந்தித்து வாழ்வினிதே
யாக்க மழியினு மல்லவை கூறாத
தேர்ச்சியிற் றேர்வினிய தில்.

எ-று—ஒன்றனைச் செய்யமாட்டாதானைச் செய்யென்றலையாமை மிகவுமினிது ; கூற்றத்தின் வரவுண்டென்று நினைத்துவாழ்தல் இனிது ; செல்வமழியினும் பாவமானவைகூறாத ஆராய்ச்சிபோல ஆராய்தன்மிக வினியதில்லை ; எ-று.
(உகூ)

௩0. கயவரைக் கைகழிந்து வாழ்த லினிதே
யுயர்வுள்ளி யூக்கம் பிறத்த லினிதே
யெளிய ரிவரென் றிகழ்ந்துரையா ராகி
யொளிபட வாழ்த லினிது.

இனியதுநாற்பது மூலமும் உரையும்.

எ-று—கீழாயினாரைக் கைகடநது வாழ்தல் இனிது ; உயர்ந்த செய்கைகளை நினைந்து ஊக்கமெழுதல் இனிது ; எளியரிவரென்று இகழ்ந்து பேசாராகிப் புகழ்பட வாழ்தல் இனிது ; எ-று. (௩௦)

௩௧. நன்றிப் பயன்றூக்கி வாழ்த னனியினிதே
மன்றக் கொடும்பா டுரையாத மாண்பினிதே
யன்றறிவா ரியாரென் றடைக்கலம் வெளவாத
நன்றியி னன்கினிய தில்.

எ-று—ஒருவன் செய்த நன்றியைப் பயன்றூக்கிவாழ்தல் மிகவி னிது ; மன்றத்தின்கணின்று வழக்கழிவு சொல்லாமை மிகவினிது ; அடைக்கலம் வைத்தவன்று அறிவார்யார் என்றுசொல்லி அதனை வெளவாத நன்றியேபோல மிகவுமினியதில்லை ; எ-று. (௩௧)

௩௨. அடைந்தார் துயர்கூரா வாற்ற லினிதே
கடன்கொண்டுஞ் செய்வன செய்த லினிதே
சிறந்தமைந்த கேள்விய ராயினு மாராய்ந்
தறிந்துரைத்த லாற்ற லினிது.

எ-று—தம்மையடைந்தார் துயர்கூராதவாறு ஆற்றல் இனிது ; தனி கடுகொண்டாயினுஞ் செய்யத்தகுவன செய்தல் இனிது ; மிகவடைந்த கேள்வியராயினும் ஆராய்ந்தறிந்தே ஒன்றைச் சொல்லுதல்

இனிது; எ-று.

௩௩. கற்றறிந்தார் கூறுங் கருமப் பொருளினிதே
பற்றமையா வேந்தன்கீழ் வாழாமை முன்னினிதே
தெற்றென வின்றித் தெளிந்தாரைத் தீங்கூக்காப்
பத்திமையிற் பாங்கினிய தில்.

எ-து—நூல்களைக் கற்றுணர்ந்தார் சொல்லுங் கருமப்பொருள் இனிது; பற்றுக் கோடாயமையாத வேந்தன்கீழ் வாழாமை மிகவும் இனிது ; தன் மையின்றியே எளியாராய்த் தம்மைத் தேறியடைந்தாரைத் தீங்குசெய்யாத காதலினன்றாக இனியதில்லை ; எ-று. (௩௩)

௩௪. ஊர்முனியா செய்தொழுகு மூக்க மிகவினிதே
தானே மடிந்திராத் தாளாண்மை முன்னினிதே
வாண்மயங்கு மண்டமருண் மாறாத மாமன்னர்
தானை தடுத்த லினிது.



எ-து—தானிருக்குமூர் வெறுக்கத்தகாத செயல்களைச் செய்யும் மடிந் திராதான் முயற்சி மிகவு மினிது; வாண்மிடைந்து மண்டியவமருள் மீளாத வூக்கத்தினையுடைய மன்னரது தானையை ஒருவன் விலக்குதல் இனிது ; எ-று

௧௫. எல்லிப் பொழுது வழங்காமை முன்னினிதே
சொல்லுங்காற் சோர்வின்றிச் சொல்லுதன்
மாண்பினிதே
புல்லிக் கொளினும் பொருளல்லார் தங்கேண்மை
கொள்ளா விடுத லினிது.

எ-து—இரவின்கண் வழிபோகாமை மிகவினிது ; ஒன்றைச்சொல்லும் பொழுது சோர்வுபடாமற் சொல்லுதன்மாண்பு இனிது; வலியத்தாங்கள் வந்து பொருந்தி நட்புக்கொளினும் ஒரு பொருளாக மதிக்கப்படாதார் கேண்மையைக் கொள்ளாதே நீக்குதல் இனிது ; எ-று (௧௫)

௧௬. ஒற்றினா னொற்றிப் பொருடெரிதன் முன்னினிதே
முற்றான் றெரிந்து முறைசெய்தன் முன்னினிதே
பற்றிலனாய்ப் பல்லுயிர்க்கும் பாத்துற்றுப் பாங்கறிதல்
வெற்றல்வேல் வேந்தர்க் கினிது.

எ-து—ஒற்றாலே புறம்புள்ள செய்கைகளை ஒற்றுவித்தாராயுமாட்சி மன்னர்க்கினிது ; செய்வதற்கு முன்னே ஆராய்ந்து முறைசெய்தன் மிக வுமினிது ; ஒருவர்க்குப்பற்றிலனாய் எல்லாவுயிர்க்கும் பரிவுற்று நன்மையறிதல் வென்றியையுடைய வேந்தர்க்கு இனிது ; எ-று. வெற்றல்—வென்றி.

கஎ. அவ்வித் தழுக்கா றுரையாமை முன்னினிதே
செவ்வியனாய்ச் செற்றுச் சினங்கடிந்து வாழ்வினிதே
கவ்வித்தாங் கொண்டுதாங் கண்டது காமுற்று
வவ்வார் விடுத லினிது.

எ-து—மன்னர் மனக்கோட்டஞ்செய்து அழுக்காறு சொல்லாமை மிகவினிது; தன் மனஞ் செவ்வியனாய்ச் சினத்தைவெகுண்டு நீக்கியொழுகுதல் இனிது; யாப்புறக்கொண்டு தாங்கண்டபொருளைக் காதலித்து வௌவாதொழித னன்று; எ-று.
(கஎ)

கஅ. இளமையை மூப்பென் றுணர்த லினிதே
கிளைஞர்மாட் டச்சின்மை கேட்ட லினிதே



தடமென் பணைத்தோட் டளிரிய லாளை
விடமென் றுணர்த லினிது.

எ-து—தமக்குள்ள இளமையை மூப்பாகக்கருதி மகிழாமை இனிது; நட்டார்மாட்டு அஞ்சத்தகும் துன்ப மில்லாமை கேட்டல் இனிது; மெல் லியதாய்ப் பெருத்த தோளையுடைய தளிரியலாளை

நஞ்சென்று கருதல் இனிது ; எ-று. இளைஞர்மாட்டசின்மை கேட்டல்—நட்டார்மாட்டு அஞ் சத்தகுந் துன்பமில்லாமை கேட்டல். (௩அ)

௩௯. சிற்றா ளுடையான் படைக்கல மாண்பினிதே
நட்டா ருடையான் பகையாண்மை முன்னினிதே
யெத்துணையு மாற்ற வினிதென்ப பால்படுங்
கற்றா வுடையான் விருந்து.

எ-து—சிற்றாளுடையான் படைக்கலமுடையனாதல் மாட்சிமைப்பட இனிது ; சுற்றத்தாரை யுடையான் தன் பகைவரோடு பொருதல் இனிது ; பாலையுடைய கற்றாவை யுடையான் விருந்து மிகவு மினிது ; எ-று (௩௯)

௪0. பிச்சைபுக் குண்பான் பிளிற்றாமை முன்னினிதே
துச்சி லிருந்து துயர்கூரா மாண்பினிதே
யுற்றபே ராசை கருதி யறனொரூஉ
மொற்க மிலாமை யினிது.

எ-து—பிசசைபுக் குண்பான் வெகுளாமை மிகவினிது ; ஒதுக்கிருந்து துன்பமுறாத மாட்சிமை இனிது ; மிக்கவூதியங்கருதி அறத்தை நீங்கு மன த்தின்கட்டளர்ச்சியில்லாமை இனிது ; எ-று. (௪0)

௪க. பத்துக் கொடுத்தும் பதியிருந்து வாழ்வினிதே

வித்துக்குற் றுண்ணு விழுப்ப மிகவினிதே
பற்பல நாளும் பழுதின்றிப் பாங்குடைய
கற்றலிற் காழினிய தில்.

எ-து—தானிருக்கும் இறையிற் பத்துமடங்கிறுத்தும் தம் பதியின் கணிருந்து வாழ்தல் இனிதே; நன்மையாய விளைவிற்குக் காரணங்களைச் சிதைத்துண்ணாத விழுப்பம் மிகவினிது; பலநாளும் நன்மையுடைய நூல்களைப் பழுதுபடாமே கற்றலிற் காழினியதில்லை; எ-று (சுக).

இனியது நாற்பது முற்றிற்று.

---

௳

# இனியது நாற்பது.

## செய்யுண் முதற்குறிப்பு அகராதி.

அடைந்தார் - ௬௨.
அதர்சென்று - கஉ.

அந்தணர் - ௮.

அவ்வித்த - ௧௭.

ஆற்றுந்துணை - ௭.

ஆற்றுனை - ௨௯.

இளமையை - ௧௮.

உடையான் - ௧.

ஊறுங்கலி - ௯.

ஊர்முனி - ௧௪.

எல்லிப்பொ - ௧௫.

ஏவதுமாறு - ச.

ஐவாய - உசா.

ஒற்றை - கூசா.

கடமுண்டு - கக.

கண்ணூன்று - க

குழவிதளர் - கரு.

குழவிபிணி - கங.

கொல்லாமை - ௬.

சலவரைச் - உக.

சிற்றுளுடை - ஙகூ.

தங்கணமர் - க௦.

தானங்கொடுப - உஅ.

நச்சித்தற் - உஎ.

நட்டார்க் - க௯.

நட்டார்ப் - உ௦.

நன்றிப்பயன் - ஙக.

பத்துகொடுத் - சக.

பிச்சைபுக்கா - உ.

பிசைசபுக்குண் - ச0.

பிறன்கைப் - உஉ.

பிறன்மனை - கரு.

மன்றின்முழு - ககூ.

யானபழிந்த - கச.

யானையுடைப் - ரு.

வருவாயறிந் - உங.

வெல்வது - உரு.

V. B, SU[illegible]MANIYASARMA

TAMIL[illegible]NDI[illegible]

கடவுள் துணை.

# மாறன்பொறையனார்

அருளிச்செய்த

# ஐந்திணையைம்பது

## மூலமும் உரையும்.

---

பாயிரம்.

பண்புள்ளி நின்ற பெரியார் பயன்றெரிய
வண்புள்ளி மாறன் பொறையன் புணர்த்தியாத்த
வைந்திணை யைம்பது மார்வத்தி னோதாதார்
செந்தமிழ் சேரா தவர்.

---

# க.—முல்லை.

க மல்லர்க் கடந்தா னிறமேபோன் றிருண்டெழுந்து
செல்வக் கடம்பமர்ந்தான் வேன்மின்னி—நல்லா
யியங்கெயி லெய்தவன் றார்பூப்ப வீதோ
மயங்கி வலனேருங் கார்.

தலைமகளைத் தோழி பருவங்காட்டி வற்புறுத்தியது.

இதன்பொருள். மல்லரைவென்றவன நிறம்போல இருளைச்செய்தெழுந்து செல்வக் கடப்பந்தாரினை விரும்பினான் வேல்போல மின்னி விசும்பின் இயங்குகின்ற மூப்புரங்களை யெய்தவன் கொன்றைத்தார் பூப்ப மிடை நது எழாநின்றது நல்லாய்! இக்கார் என்றவாறு. (க)

---

* இஃது சங்கத்தாரால் றொகுக்கப்பட்ட பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று

உ ஐந்திணையைம்பது.

உ *அணிநிற மஞ்ஞை யகவ விரங்கி
மணிநிற மாமலைமேற் றாழ்ந்து—பணிமொழி
கார்நீர்மை கொண்ட கலிவானங் காண்டொறும்
பீர்நீர்மை கொண்டன தோள்.

## பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(இ-ள்) அழகிய நிறத்தையுடைய மயில்களழைக்க முழங்கி நீலமணி நிறத்தையுடைய மாமலைகளின்கட் படிந்து, மெல்லிய மொழியை யுடையாய்! கார்காலத்துத் தன் மையைக் கொண்ட மிக்க முகில்களைக் காணுந்தோறும் என்றோள்கள் நீரின் தன்மையைக கொண்டன எ-று. (உ)

ங. மின்னு முழக்கு மிடியுமற் றினை
கொலைப்படை சாலப் பரப்பிய முல்லை
முகைவென்ற பல்லினா யில்லையோ மற்று
நமர்சென்ற நாட்டினிக் கார்.

## பருவங்கண்டழிந்த கிழத்திக்குத் தோழி சொல்லியது.

(இ-ள்) நமர்சென்ற நாட்டின்கண் மின்னும் முழக்கும் இடி யும் என்றுசொ ல்லப்பட்ட இக்கொலைப் படைகளை நிரம்பப் பரப்புதற்கு இக்காரில்லையோ முல்லை முகை வென்ற பல்லினாய்! எ-று. (ங)

உள்ளார்கொல் காதல ரொண்டொடி நந்திறம்
வள்வார் முரசின் குரல்போ லிடித்துரறி
நல்லார் மனங்கவரத் தோன்றிப் பணிமொழியைக்
கொல்வாங்குக் கூர்ந்ததிக் கார்.

(௮)

முல்லை நறுமல ரூதி யிருந்தும்பி
செல்வர்க் குடையார்க் கினியவாய்—கல்லாய்மற்
றியாருமில் னெஞ்சினே னாயுறைவேனை
யீர்ந் திருண்மாலை வந்து.

## இதுவுமது.

(இ-ள்) கல்லாய் இருந்தும்பி முல்லைநறுமலரை ஊதுதலாற் றமக்குச் செல்வர்களாகிய கொழுநரையுடையார்க்கு இன்பத்தைச் செய்வனவாய் யாரும் துணையில்லாத நெஞ்சினேனாகி உறைவேனை இருண்மாலை வந்து ஈர்கின்றது என்றவாறு.

(௯)

௭ தேரோன் மலைமறைந்த செக்கர்கொள் புன்மாலை
யாரான்பி னாய னுவந்தூதுந்—சீர்சால்
சிறுகுழ லோசை செறிதொடி வேல்கொண்
டெறிவது போலு மெனக்கு.

## இதுவுமது.

(இ-ள்) தேரினையுடைய பகலவன் மலையின்கண் மறைந்த செக்கர் கொண்ட புன் மாலையின்கண் அரிய ஆனிரையின் பின்னே ஆயன் விரும்பி ஊதுஞ் சீரமைந்த சிறுகுழல் இன்னோசை, வேல்கொண்டு எறிவது போலாநின்றது செறிதொடி! எனக்கு என்றவாறு.

அ பிரிந்தவர் மேனிபோற் புல்லென்ற வள்ளி
பொருந்தினர் மேனிபோற் பொற்பத்—திருந்திழாய்
வானம் பொழியவும் வாரார்கொ லின்றாத
கானங் கடந்துசென் றார்.

இதுவுமது.

(இ - ள்) துணைவரைப் பிரிந்தார் மேனிபோலப் புற்கென்ற வள்ளிகள், துணைவரோடு பொருந்தியிருந்தார் மேனிபோலப் பொலிவு தோன்றும் வகை வானம் பொழியவும் வாரார்கொல்லோ, திருந்திழாய்! இன்றாத கானங்களைக் கடந்துசென்றார் எ-று. (அ)

கூ வருவர் வயங்கிழாய் வாளொண்க ணீர்கொண்
டுருகி யுடன்றழிய வேண்டா—தெரிதியேற்
பைங்கொடி முல்லை மணிபுரை யீன்றுனை
வம்ப மழையுறக் கேட்டு.

பருவமென்றழிந்த கிழத்தியைத் தோழி பருவமன்றென்று வற்புறுத்தியது. (இ - ள்) விளங்கிய இழைகளையுடையாய்! நங்காதலர் பருவம் வந்தால் வருவர்; வாளினை ஒக்கும் நின் கண்கள் நீர்கொள்ள நீயுருகி மாறுபட்டு அழியவேண்டா; ஆராய்வாயாயிற் றன்பருவமல்லாமையின் நிலையில்லாத முழக்கங் கேட்டுப்

பைங்கொடி முல்லைகள் அவிழரும்பு ஈன்றனகாண் எ-று.
(கூ)

கO நானவின்ற பாகதேர் நொவ்விதாச் சென்றீக
தேனவின்ற கானத் தெழினோக்கித்—தானவின்ற
கற்புத்தாள் வீழ்த்துக் கவுண்மிசைக் கையூன்றி
நிற்பா ணிலையுணர்கம் யாம்.

வினைமுற்றிய தலைமகன்
தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியது. (இ - ள்)

நூல்பயின்ற பாகனே! நின்றேர் கடிதாகச் செல்வதாக; தேன் பயின்ற காட்டினது அழகை நோக்கித் தான்பயின்ற கற்பென்னுநின்ற தாளினைச் செறித்து உயிர்காத்துக் கவுளின்மிசைக் கையூன்றி நிற்பாளது நிலைமையை நாம்சென்று அறிவாம் எ-று.
(கO)

முல்லைமுடிந்தது.

## உ.—குறிஞ்சி.

கக பொன்னிணர் வேங்கை கவினிய பூம்பொழிலு
ணன்பலவு நாட னலம்புனைய—மென்முலையாய்
போயின சின்னாள் புனத்து மறையினு
மேயின நீங்கி நினைந்து.

பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி

தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் செறிப்பறிவுறீஇயது.

(இ - ள்) பொன்போன்ற பூங்கொத்தையுடைய வேங்கைகள் அழகு பெற்ற பூம்பொழிலின்கண் வந்து நன்மலைநாடன் நினது நலத்தினைப் புனையக் கழிந்தன சிலநாள்; புணர்ந்தின்கட் களவினான் எதிர்ப்பட்டோ ரின்றி இடையூறின்றியே யினிதாக எ-று.
(க)

௬௨ பாலவரை வெற்ப வளங்கூரு குறவேலைக்கல்
நால் விரிந்த பொழிற் கோடாலங்— தூவருவி
பூங்கண் கழூஉப் புறவிற்றாய்ப் பொன்விளையும்
பாக்கமெம் முடைய திடம்.

பகற்குறிவந்து பெயர்கின்ற தலைமகனைக்
கண்ணுற்றுத் தோழி செறிப்பறிவுறீஇயது. (இ - ள்)
பெரிய குவடுகளையுடைய வெற்பனே! விளைந்த கதிர்களை யுடைய பசுந்தினையைக் காத்தல் யாமொழிந்தேம்; தூவருவிகள் பூவின் கண்களைக் கழூஉகின்ற காட்டினை யுடைத்தாய்ப் பொன்விளையும் இப்பாக்கம் எம்முடைய இடமாதலான், நீயிங்கே வாக்கூடின் வருவாயாக எ-று.
(உ)

௬௩ நானாக நாடன் நலவாவென் றேறென்று
. . . . ல .

மானமா னனைனைப மயங்கன்—நானங
கலந்திழியு நன்மலைமேல வாலருவி யாடப்
புலம்பு மகன் றுநில் லா.

சிறைப்புறத்தானுகத் தலைமகனை யியற்பழித்த
தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது. (இ -

ள்) கானகநாடன் என்றோளைப் புணரானென்று சொல்லி; 'மான்
போன்ற மதர்த்த கண்ணினையுடையாய்! அறிவு கெடா
தொழிவாயாக;



பலநறுவிரைகளையுங் கலந்து இழியாநின்ற நன்மலையின்கண் உள்ள
வாலிய அருவியையாட என்றோள்களின்கட் புலம்பும் நீங்கி நில்லாது
எ-று (௩)

கச புனைபூந் தழையல்குற் பொன்னன்னாய் சாரற்
றினைகாத் திருந்தேம்யா மாக—வினைவாய்த்து
மாவினவு வார்போல வந்தவர் நம்மாட்டுத்
தாம்வினவ லுற்றதொன் றுண்டு.

தோழி தலைமகட்கு மெலிதாகச்
சொல்லிக் குறைநயப்புக்கூறியது.

( இ - ன்) செய்யப்பட்ட பூந்தழைகளான் அணியப்பட்ட அல்குலினை யுடைய பொன்னன்னாய் ! மலைச்சாரலின்கட் டினையைக் காத்து நாம் இருந் தேமாக, வினையை வாய்க்கசெய்து ஒருமாவினவுவார்போல வந்தாரொரு வர் நம்மாட்டுத் தாம் வினவலுற்ற பிறிதொன்று உண்டு எ-று. (௯)

கரு * வேங்கை நறுமலர் வெற்பிடை யாங்கொய்து
மாந்தளிர் மேனி வியர்ப்பமற்—றாங்கெனைத்தும்
பாய்ந்தருவி யாடினே மாகப் பணிமொழிக்குச்
சேந்தனவாஞ் சேயரிக்கண் டாம்.

பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகத்
தோழி தாய்கேட்டதற்கு மறுமாற்றஞ் சொல்லுவாள்
போலப் படைத்துமொழிகிளவியான் வரைவுகடாயது.

( இ- ன்) வெற்பின்கண் வேங்கைமலரையுங் கொய்து நின்மகள் மாந் தளிர்மேனி வியர்த்தலான் அவ்விடத்து எல்லாவருவியும் பாய்ந்தாடினே மாகப் பணிமொழியையுடையாட்குச் சேயரிக்கண்டாம் சிவந்தன காண் எ-று.
(௰)

கசு கொடுவரி வேங்கை பிழைத்துக்கோட் பட்டு
மடிசெவி வேழ மிரீஇ—யடியோசை
யஞ்சி யொதுங்கு மதருள்ளி யாரிருட்
டுஞ்சா சுடர்த்தொடி கண்.

* இதனை "ஐயச் செய்கை தாய்க்கெதிர் மறுத்துப், பொய்யென மாற்றி மெய்வழி கொடுப்பினும்" என்பதற்கு உதாரணங்காட்டுவர் நச்சினார்க் கினியர். (தொல், பொரு, கள, உ௩.)



## இரவுக்குறிவந்து பெயருந் தலைமகனைக் கண்ணுற்றுநின்ற தோழி வரைவுகடாயது.

(இ - ள்) கொடுவரி வேங்கையாற் கோட்பட்டுப் பிழைத்து மடிந்த செவி யையுடைய வேழம் பிரிந்து தன்னடியோசையைப் புலி கேட்குமென்று அஞ்சி மெல்ல நடக்கும் வழியை நினைந்து, கங்குலின்கட் சுடர்த்தொடி யையுடையாள் கண் துயிலா எ-று. (சு)

கஎ மஞ்சிவர் சோலை வளமலை நன்னாட
வெஞ்சாது நீவருதி யென்றெண்ணி—யஞ்சித்
திருவொடுங்கு மென்சாயற் றேங்கோதை மாத
ருருவொடுங்கு முள்ளுருகி நின்று.

இதுவுமது.

(இ - ள்) முகில் படாநின்ற சோலையையுடைய வள மலைநாடனே! ஒருநாள் ஒழியாது இரவின்கண் நீ வாராநின்றாய் என்று எண்ணித், திரு வொடுங்கு மென்சாயற் றேங்கோதை மாதர் அஞ்சி யுள்ளுருகி நின்று தன்மேனி மெலியாநின்றாள் எ-று. (எ)

கஅ *எறிந்தெமர் தாமுழுத வீர்ங்குர லேனன்
மறந்துங் கிளியினமும் வாரா—கறங்கருவி
மாமலே நாட மடமொழி தன்கேண்மை
நீமறவ னெஞ்சத்துக் கொண்டு.

தோழி செறிப்பறிவுறீஇத் தலைமகனை வரைவுகடாயது. (இ-ள்) காடெறிந்து எமர்தாமுழுத ஈர்ங்குரல் ஏனலின்கண் மறந்தாயினுங் கிளியினமும் நாங்களும் வாரோம்; கறங்கருவியினையுடைய மாமலை நாடனே! மடமொழியோடு நீ கொண்ட கேண்மையை நின்னெஞ்சத்துக் கொண்டு மறவாயாக எ-று. (அ)

கக † நெடுமலை நன்னாட னீள்வே றுணையாக்
கடுவிசை வாலருவி நீந்தி—நடுவிரு

---

* இதனை "ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும்" என்புழி எடுத்தோதினார் நச்சினார்க்கினியர். (தொல், பொரு, கள, உக.) அகப்பொருள் விளக்க வுரைகாரரும் பாங்கி தலைமகனை முன்னின்று செறிப்புணர்த்தி ஓம்படை சாற்றற்கு உதாரணங்காட்டுவர். (களவியல், கமஅ.)

† இது இரவுக்குறி விலக்கியது என்றார் நச்சினார்க்கினியரும். (தொல், பொரு, கள, உக.)

அ மருதம்.

வின்னு வதர்வர வீர்ங்கோதை மாதரா

ளென்னுவா ளென்னுமென் னெஞ்சு.

தோழி இரவுக்குறியின்கண்
நெறிவிலக்கி வரைவுகடாயது.

(இ - ள்) நெடுமலை நன்னாடனே! நீள்வேலே துணையாகக் கடிய விசையையுடைய வாலருவியை நீந்தி, நடுவிருளின்கண் இன்னாத வழியின்கண் நீவர, ஈர்ங்கோதை மாதரான் எப்பெற்றியாவாளோ என்று தடுமாறாநிற்கும் என்னெஞ்சு எ-று.

(௯)

௨௦ * வெறிகமழ் வெற்பனென் மெய்ந்நீர்மை கொண்ட
தறியாண்மற் றன்னோ வணங்கணங்கிற் றென்று
மறியீர்த் துதிரந்தூய் வேலற் றரீஇ
வெறியோ டலம்வரும் யாய்.

தலைமகள் தோழிக்கு அறத்தொடுநின்று
வெறிவிலக்கவேண்டும் உள்ளத்தாளாய்ச் சொல்லியது.

(இ - ள்) விரைகமழாநின்ற வெற்பன் எனதுமெய்யின்கண் உள்ள நீர்மையைக் கொண்டது அறியாளாய், அந்தோ தெய்வம் என்னை வருத்திற்று என்று வேலனைத் தந்து மறியை யறுத்து உதிரத்தைத் தூவி வெறி யோடே வருநதாநின்றாள் அன்னை எ-று.

(௧0)

குறிஞ்சி முடிந்தது.

---

# ௩.—மருதம்.

௨௧ கொண்டுழிப் பண்டம் விலையொரீஇக் ‡ கொற்சேரி

துண்டுளைத் துன்னூசி விற்பாரி—னென்றானும்
வேறல்லை பாண வியலூரன் வாய்மொழியைத்
தேற வெமக்குரைப்பாய் நீ.

பாணற்குத் தலைமகள் வாயின்மறுத்தது.

---

* இது வெறியச்சுறுத்தியது என்பர் நச்சினார்க்கினியர். (தொல், பொரு, கள, உக.) அகப்பொருள்விளக்கவுரைகாரரும் வெறிவிலக்கிற்கு உதாரணம் காட்டுவர். (களவியல், சுஅ.)

‡ "வைகொண்ட வூசிகொற் சேரியின் விற்றெம்மில் வண்ணவண்ணப், பொய்கொண்டு விற்கலுற் றோபுலை யாத்தின்னி போந்ததுவே" என்றார் திருச்சிற்றம்பலக்கோவையினும். (கஅசு)

மருதம். ௯

(இ - ள்) பண்டங் கொண்ட விலையை வேறுபடுத்துக் கொற்சேரியின் கண் நுண்ணிய துளையையுடைய ஊசியை விற்றுத்திரிவாரின் யாதானும் வேறல்லை; பாண! வியலூரன் வாய்மொழியைத் தெளிய எமக்கு உரைக்கின்ற நீ எ-று.

(க) உஉ போதார்வண் டூதும் புனல்வய லூரற்குத்
தூதாய்த் திரிதரும் பாண்மகனே—நீதா
னறிவயர்ந் தெம்மில்லு ளென்செய்ய வந்தாய்
நெறிய துநா னெங்கைய ரிற்கு.

இதுவுமது.

(இ - ள்) மலர்களை நுகராநின்ற வண்டுகள் ஊதும்

புனல்வயலூரற் குத் தூதாய் உழல்கின்ற பாண்மகனே ! நீதான் அறிவு கலங்கி எங்கள் மனையுள் என்செய்யவந்தாய் ? எங்கையர் மனைக்கு வழி அதுகாண் எ-று.
(உ)

உரு. யாணா ரகல்வய லூர னருளுதல்
பாண பரிந்துரைக்க வேண்டுமோ—மாண
வறிவ தறியு மறிவினர் கேண்மை
நெறியே புரையாதோ மற்று.

இதுவுமது.

(இ - ள்) வளமையுடைய அகல்வயலூரான் எமக்கு அருளுடையன் என்பதனைப், பாணனே ! நீ காதலித்து உரைக்க வேண்டுமோ ? மாட்சிப்பட அறியக்கடவதனையறியும் அறிவினையுடையார் செய்யும் நட்புநெறியை அவர் அருளுடைமையே உரையாதோ ? எ-று. (ரு)

உசு கோலச் சிறுகுருகின் குதத்ஞ்சி யீர்வாளை
நீலத்துப புக்கொளிக்கு மூரற்கு—மேலெலாஞ்
சார்தற்குச் சந்தனச்சார தாயினே மிப்பருவங்
காரத்தின் வெய்யவென் றோள்.

இதுவுமது.

(இ - ள்) அழகிய சிறுகுருகின் குத்தினையஞ்சிக் குளிர்ந்தவாளை நீலமல ரின்கட்
புக்கு ஒளிக்கும் ஊரினையுடையாற்குப், பண்டெல்லாம் புணர்தற்



குச் சந்தனக்குழம்பாயினேம்; இக்காலம் புண்ணிற்கு இடும் காரம் போல வெய்யவாம் எம்முடைய தோள் எ-று.
(சு)

உ௫ அழலவிழ் தாமரை யாய்வய லூரன்
விழைதகு மார்ப முறுநோய்—விழையிற்
குழலுங் குடுமியென் பாலகன் கூறு
மழலைவாய்க் கட்டுரை யால்.

வாயில்வேண்டிச் சென்றார்க்குத்
தலைமகள் வாயின்மறுத்தது.

(இ-ள்) அழல்போல அவிழுந் தாமரைகளையுடைய ஆய்வயலூரனுடைய கண்டார் விழையப்பட்ட மார்பம் துன்புறுநிற்கும்; குழலுங குடுமியென் பாலகன் கூறும் மழலைவாய்க் கட்டுரையான் எம்மை விரும்பிப் புணருமாயின் எ-று.
(௭) உசு பெய்வளைக் கையாய் பெருநகை யாகின்றே

செய்வய லூரன் வதுவை விழவியம்பக்
கைபுனை தேரேறிச் செல்வானைச் சென்றிவ
னெய்தி யிடருற்ற வாறு.

## புதல்வனை முனிந்து தலைமகண் மறுத்தாளைப் போலத் தோழிக்கு வாயினேர்ந்தது.

(இ-ள்) பெய்வளையினையுடைய கையாய்! எனக்குப்
பெரியநகையாகாநின் றது; செய்த வயல்களையுடைய ஊரன்,
பரத்தையர் புதுமணங்களின் உள்ள முழவு ஒலித்தலாற் கைபுனை
தேரேறிச் செல்வானை இப்புதல்வன் கண்டு சென்று எய்த, அவ்வூரன்
புதுமணம் புணரப் பெறாது இடருற்றவாறு எ-று

(சு) உஎ தண்வய லூரற் புலக்கும் தகையமோ
நுண்ணறல் போல நுணங்கிய வைங்கூந்தல்
வெண்மரற் போல நிறந்திரிந்து வேறாய
வண்ண முடையேமற் றியாம்.

## வாயில் வேண்டிச் சென்றார்க்குத் தலைமகள் வாயின்மறுத்தது.

(இ-ள்) தண்வயல் ஊரனை ஊடுந் தகையமோ? நுண்ணிய அறல்
மணற்

போலும் நுணுகிய ஐவகைப்பட்ட கூந்தல் வெள்ளை மாற்போலத் தன் னிறந் திரிந்து வேறுபட்ட நிறத்தையுடையேம் ஆதலான் எ-று (எ)

உஅ ஒல்லென் றொலிக்கு மொலிபுன லூரற்கு
வல்லென்ற தென்னெஞ்சம்
வாட்கண்ணாய்—நில்லென்னு
தேக்கற்றங் கென்மகன் றாணிற்ப வென்னுனு
நோக்கான்றே றூர்ந்தது கண்டு.

## தலைமகள் தோழிக்கு வாயின்மறுத்தது.

( இ - ள் ) ஒலிபுனலையுடைத்தாய்ப் பிறவோசையானும் **ஒல்லென்றொலி** க்கும் ஊரற்கு என்னெஞ்சம் நெகிழாது வலிதாயிற்று; வாட்கண்ணாய்! புதல்வன் தன்னை விரும்பிநிற்பக் கண்டுவைத்துப் பாகனை நில்லென்று சொல்லாதே என் புதல்வனையும் பின்பாராதே தேரூர்ந்து பரத்தையர் மனைக்குச் சென்றது கண்டு எ-று. (அ)

உகூ ஒல்லென் றொலிபுன லூரன் வியன்மார்பம்
புல்லேன்யா னென்பேன் புனையிழையாய்—புல்லே
னெனக்கோர் குறிப்பு முடையெனோ வூரன்
றனக்கேவல் செய்தொழுகு வேன்.

ஆற்றாமையே வாயிலாகப்புக்க தலைமகன் புணர்ந்து நீங்கியபின்பு சென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(இ - ள்) ஒலிபுனலையுடைத்தாய்ப் பிறவோசையான் ஒல்லென்னும் ஊரனுடைய அகன்ற மார்பத்தினை யான் முயங்கேன் என்றுசொல்லி அவனைக் காணாதமுன் நினைத்திருப்பேன்; புனையிழையாய்! அவனைக்கண்டபின் முயங்கேனாதற்கு எனக்கெனப் பெற்ற கருமம் உடையேனோ? ஊரன்றனக்கு ஏவல் செய்து ஒழுகுவேன் ஆதலான் எ-று. (கூ)

க0 குளிரும் பருவத்தே யாயினுந் தென்றல்
வளியெறியின் மெய்யிற் கினிதா—மொளியிழாய்
யூடி யிருப்பினு மூரன் நறுமேனி
கூட லினிதா மெனக்கு.



(இ - ள்) குளிருங் காலத்தேயாயினும் தென்றற்காற்று எறியின் உடம்பிற்கு இனிதாம்; அதுபோல, ஒளியிழாய்! யான் அவனைப் புலந்திருந்தேன் ஆயினும், அவ்வூரன் அழகிய நாற்றத்தினையுடைய மேனியைக்கூடுதல் இனிதாம் எனக்கு எ-று

மருதம் முடிந்தது.

---

## ச.—பாலை.

௩௧ * உதிரந் துவறிய வேங்கை யுகிர்போ
லெதிரி முருக்கரும்ப வீர்ந்தண்கார் நீங்க—வெதிருநர்க்
கின்பம் பயந்த விளவேனில் காண்டொறுந்
துன்பங் கலந்தழியு நெஞ்சு.

பருவங்கண்டழிந்த தலைமகள்
தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்) உதிரத்தையளைந்து துவறிய புலியினது உகிர்போலப் பருவத்தையெதிர்ந்து முருக்குக்கள் அரும்ப, ஈர்ந்தண் முகில் நீங்கக், காதலர்

---

* இவ்வெண்பாவினுள் இரண்டாமடி ஐஞ்சீரான் வந்தமைக்கிலக்கணம், "வெண்டளை விரவியு மாசிரியம் விரவியும், ஐஞ்சி ரடியு முளவென மொழிப" என்னுந் தொல்காப்பியச் செய்யுளியற் சூத்திரத்துப் பேராசிரியர், "வெண்டளை விரவியும், ஆசிரியம் விரவியும் என்றது என்னையெனின்— அவ்வைஞ்சீரடி

வெண்பாவோடு விராயும், ஆசிரியப்பாவோடு விரா யும் வரும் என்றவாறு" எனவும், " கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க, வொண்செங் குருதியி னேடு கிடப்பதே—கெண்டிக்,கெழுதகை யில்லேன் கிடந்தூடப் பன்ஞ, எழுதகண் ணீர்துடைத்த கை " என்னும் வெண்பாவி னுள் இரண்டாமடி ஐஞ்சீரான் வந்தது " எனவும் கூறியவாற்ருனும், நச்சி ஞர்க்கினியர், " வெண்பாவோடுங் கலிப்பாவோடும் விராயும், ஆசிரியப்பா வோடு விராயும் ·வரும் ஐஞ்சீரடிகளுமுள என்று கூறுவர் புலவர் எ-று." எனவும், " கண்டகம் பற்றி. ... .......கை " " கிடங்கிற் கிடங்கிற் கிட ந்த கயலைத்,தடஙகட் டடங்கட் டளிரியல்கொள்ளாள்—கிடங்கில்,வளையாற் பொலிந்தகை வையெயிற்றுச் செவ்வா, யிளையாடன் கண்ஞெக்கு மென்று" இவற்றுள் இரண்டாமடி ஐஞ்சீரடி வந்த வாறுகாண்க " எனவும் கூறியவாற் ருனும் உணர்க.

பாலை. கங

தம்முட்டலைப்பட்டார்க்கு இன்பத்தைக் கொடுத்த இளவேனிலைக் காணுந் தோறுந் துன்பத்தோடு புணர்ந்து அழியாநின்றது என்னெஞ்சு. எ-று. (க)

௩௨ விலங்கல் விளங்கிழாய் செல்வாரோ வல்ல
ரழற்பட் டசைந்த பிடியை—யெழிற்களிறு
கற்சுனைச் சேற்றிடைச் சின்னீரைக் கையாற்கொண்
டுச்சி யொழுக்குஞ் சுரம்.

## தலைமகனது பிரிவுக்குறிப்பறிந்தாற்றுளாய தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது.

(இ - ள்) அவர் செலவினை விலங்காதொழிக ; விளங்கிய இழையினையுடையாய் ! செல்லமாட்டார் ; காட்டழற்பட்டு வருந்திய பிடியினை அதனது எழிற் களிறு கற்சுனைச் சேற்றிடையுள்ள சின்னீரைத் தன் கையாலே கொண்டு அப்பிடியின் உச்சியின்கண் ஒழுக்குஞ் சுரத்தை எ-று. (உ)

௩௩ பாவையும் பந்தும் பவளவாய்ப் பைங்கிளியு
மாயமு மொன்று நினைநினையாள்—பால்போலு
மாய்ந்த மொழியினாள் செல்லுங்கொல் காதலன்பின்
காய்ந்து கதிர்தெறூஉங் காடு

மகட்போக்கியநற்றாய் கவன்று சொல்லியது. (இ - ள்) பாவையையும், பந்தையும், பவளம்போன்ற வாயையுடைய பசுங்கிளியையும், ஆயத்தையும் இவற்றை ஒன்றும் நினையாளாய்ப், பால் போலும் சின்மொழியையுடையாள், தன் காதலன்பின் செல்லுங்கொல் லோ! கனன்று பகலோன் சுடுகின்ற காட்டினை எ-று. (௩)

௩௪ கோட்டமை வல்விற் கொலைபிரியா வன்கண்ண
ராட்டிவிட் டாறலைக்கு மத்தம் பலநீந்தி
வேட்ட முனைவயிற் சேறிரோ வையநீர்
வாட்டடங்கண் மாதரை நீத்து.

தோழி தலைமகனைச் செலவழுங்கியது. (இ - ள்)
கோட்டுகின்ற மூங்கில்விற்கொலையை இடையறாத வன்கண்மையையுடையார் ஆறலைத்து ஒட்டி வழியின்கண் நின்று அலைக்குங் கடறு கள் பலவற்றையு நீந்தி, வேட்டினையுடைய வெம்முனையின்கட் செல்வீரோ? ஐய! நீர் வாட்டடங்கண் மாதரைத் துறந்து எ-று.
(௬)

கசு ஐந்திணையைம்பது.

௩௫ கொடுவி லெயினர்தங் கொல்படையால் வீழ்ந்த
தடிநிண மாந்திய பேஎய்—நடுகல்
விரிநிழற் கண்படுக்கும் வெங்கான மென்பர்
பொருள்புரிந்தார் போய சுரம்.

தலைமகன் பொருள்வயிற் பிரிந்த காலத்து ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் ஆற்றுவலென்பதுபட மொழிந்தது.

(இ - ள்) கோட்டிய வில்லினையுடைய வேட்டுவர் தங்கொல்படையானே வீழ்ந்த தசையையும் நிணத்தையுந் தின்ற பேய்கள், போரின்கட்பட்டார் பெயர்பொறித்து நட்ட கல்லின் விரிநிழற்றுயிலும் வெய்ய காடென்று சொல்லுவர்; தோழி! பொருள் விரும்பினர் போகிய கடறு எ-று. (௫)

௩௬ கடிதோடும் வெண்டேரை நீராமென் றெண்ணிப்
பிடியோ டொருங்கோடித் தாள்பிணங்கி வீழும்
வெடியோடும் வெங்கானஞ் சேர்வார்கொ னல்லாய்
தொடியோடி வீழத் துறந்து.

பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் உடன்படாது சொல்லியது.

(இ - ள்) விரைந்தோடும் பேய்த்தேரை நீராமென்று கருதிக் களிறுகள் பிடியோடே கூட ஓடித் தாள்ஒய்ந்து பிணங்கிவீழும் விளவோடிய வெங்கா னத்தைச் சென்று நங்காதலர் சேர்வார்கொல்லோ ? நல்லாய் ! நங்கையிற் றொடி யோடிவீழத் துறந்து ; எ-று (௬)

௩௭ தோழியர் சூழத் துறைமுன்றி லாடுங்கால்
வீழ்பவள் போலத் தளருங்கா—ளூழாது
கல்லத ரத்தத்தைக் காதலன் பின்போதல்
வல்லவோ மாதர் நடை.

உடன்போய தலைமகட்கு நற்றாய் கவன்றுரைத்தது.

(இ-ள்) தோழியர் சுற்றம் முற்றத்திற்றுறையின் விளையாடும்பொழுதும் வீழ்பவளேபோலத் தளருங் கால்கள் ஒய்ந்து தாழாதே கல்வழி யையுடைய அத்தத்துத் தன்கொழுநன்பின் போதலைவல்லவோ ? காதலை யுடையாள் நடை

௩௭ சுனைவாய்ச் சிறுநீரை யெய்தாதென் றெண்ணிப்
பிணைமா னினிதுண்ண வேண்டிக்—கலைமாத்தன்
கள்ளத்தி னூச்சுஞ் சுரமென்பர் காதல
ருள்ளம் படர்ந்த நெறி.

## பிரிவின்கண் ஆற்றளாயின தலைமகளைத் தோழியாற்றுவித்தது.

(இ-ள்) சுனையின்கண் உள்ள சிறியநீரைப் பிணைக்கு உண்ணநிரம் பாது என்று எண்ணிப் பிணைமான் இனிதாக உண்ணவேண்டிக், கலையா கியமாத் தனது கள்ளத்தினுலே பொய்யே உறுஞ்சும் சுரமென்று சொல் லுவர்; நங்காதலர் தம் அகத்தினுற் போயினநெறி எ-று (அ)

௩௯ மடவைகா ணன்னெஞ்சே மாண்பொருண்மாட்
டோடப்
புடைபெயர் போழ்தத்து மாற்றுள்—படர்கூர்ந்து
விம்மி யுயிர்க்கும் விளங்கிழையா ளாற்றுமோ
நம்பிற் பிரிந்த விடத்து.

தலைமகன் பொருள்வலித்த நெஞ்சிற்குச்
சொல்லிச் செலவழுங்கியது.

(இ-ள்) அறியாய்காண், மிக்கநெஞ்சே! மாட்சிமைப்பட்ட பொருளின் மாட்டுச் சேறலான், முயங்கி நாம் புடைபெயருங்காலத்தும் ஆற்றமாட்டா ளாய்த் துன்பமிக்கு விம்மி உயிராநின்ற விளங்கிழையாள் ஆற்றவல்லளோ? நம்மை நீங்கியவிடத்து எ-று (க) ஏ0

இன்றல்க லீர்ம்படையு ளீர்ங்கோதை தோடுணையா
நன்கு வதிந்தனை நன்னெஞ்சே நாளைநாங்
குன்றத ரத்த மிறந்து தமியமா
யென்கொலோ சேக்கு மிடம்.

இதுவுமது.

(இ-ள்) இன்று இராவின்கட் குளிர்ந்த சேக்கையுள் ஈர்ங்கோதையையு டையாள் தோள் நமக்குத் துணையாக மிகவுந்தங்கினை; நன்னெஞ்சே! இவ் வின்பத்தைவிட்டு நாளையிராவின்கண் யாம் மலைவழியேயிறந்து தமியேமாய் எவ்விடத் தங்குமிடம்? எ-று (ய)



# ரு.—நெய்தல்.

சக தெண்கடற் சேர்ப்பன் பிரியப் புலம்படைந்
தொண்டடங்கண் டுஞ்சற்க
வொள்ளிழாய்—நன்படைந்த
சேவலுந் தன்னருகிற் சேக்குமா லென்கொலோ
பூந்தலை யன்றில் புலம்பு.

அல்ல குறிப்பட்ட தலைமகற்குச் சொல்லுவாளாய்த்
தோழி தலைமகட்குச் சொல்லியது.

(இ - ள்) தெண்கடற் சேர்ப்பன் பிரிதலாற் றனிமையையடைந்து நின் னுடைய ஒள்ளியகண்துயிலாதொழிக ; ஒள்ளிய இழைகளையுடையாய்! நண் பிணையடைந்த சேவலும் தன்னருகே உறையாநின்றதாதலான், என்னை கொல்லோ ? செம்பூப்போலுஞ் சூட்டினையுடைய பெடையன்றில் புலம்புதல் எ-று. (க)

சஉ கொடுந்தா ளலவ குறையா மிரப்பே
மொடுங்கா வொலிகடற் சேர்ப்ப—னெடுநேர்
கடந்த வழியையெங் கண்ணாரக் காண
நடந்து சிதையாதி நீ.

காமமிக்க கழிபடர்கிளவி.

(இ - ள்) கோடியிருந்த தாளினையுடைய அலவனே ! ஒரு காரியம்

நின்னை யிரப்பேம் ; ஒலியாநின்ற அடங்காத கடற்சேர்ப்பன் நெடுந்தேர் போயின வழியை எம்முடைய கண் நிரம்பக்காணும்வகை அதன்மேல் நடந்து அழி யாதொழிவாயாக என்று. (உ)

சஙு * பொரிப்புறப் பல்லிச் சினையீன்ற புன்னை
வரிப்புற வார்மணன்மே லேறித்—தெரிப்புறத்
தாழ்கடற் றண்சேர்ப்பன் றாரகல நல்குமே
லாழியாற் காணுமோ யாம்.

## இதுவுமது.

* இதனைப், "பிரிந்த வழிக்கலங்கினும்"
என்பதற்குதாரணங்காட்டுவர் நச்சினார்க்கினியர் (தொல், பொரு, கஎ, க௦.)



(இ - ள்) பொரிந்த புறத்தையுடைய பல்லிமுட்டைபோல அரும்பினை யீன்ற புன்னைப்பூக்களையுடைய வரிப்பட்ட புறத்தினையுடைய உயர்ந்த மணற்குன்றின்மேல் ஏறியிருந்து, தெளிவுறத் தாழ்கடற் றண்சேர்ப்பனு டைய தார்அகலத்தை நமக்கு நல்குமாயிற், * கூடல் இழைப்பாற் காண்பேம் யாம் என்று. (க)

சச கொண்கன் பிரிந்த குளிர்பூம் பொழினோக்கி
புண்கண் சிவப்ப வழுதே னொளிமுகங்
கண்டன்னை யெவ்வம்யா தென்னக் கடல்வந்தென்
வண்டல் சிதைத்ததென் றேன்.

பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகப் படைத்து
மொழிகிளவியாற் றோழி தலைமகட்குச் சொல்லுவா
ளாய்ச் செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

( இ - ள் ) நம்மைஇற்செறிக்கையாற் கொண்கன் பிரிந்த குளிர்பூம்பொழிலை நோக்கி உண்கண்சிவப்ப அழுத என்னுடைய ஒளிமுகத்தைக்கண்டு, அன்னை நினக்கு வந்த இடும்பை யாது என்னக் கடல்வந்து என்னுடைய விளையாட்டுச் சிற்றிலைச் சிதைத்தது என்று சொன்னேன்; எம்பெருமாட்டி ! எ-று.
(ச)

சரு ஈர்ந்தண் பொழிலு ளிருங்கழித் தண்சேர்ப்பன்
சேர்ந்தென் செறிவளைத்தோள் பற்றித் தெளித்தமை
மாந்தளிர் மேனியாய் மன்ற விடுவனவோ
பூந்தண் பொழிலுட் குருகு.

தலைமகனைத் தோழி வரைவுகடாதற்பொருட்டுத்
தலைமகள் வரைவுவேட்டுச் சொல்லியது.

* இதனைக், " கூடலாவது வட்டமாகக் கோட்டைக்கீறி அதுக்குள்ளே சுழிசுழியாகச் சுற்றுஞ்சுழித்து இவ்விரண்டு சுழியாகக் கூட்டினால், இரட் டைப்பட்டாற் கூடுகை ; ஒற்றைப்பட்டாற் கூடாமையென்று ஸங்கேதம் " என நாச்சியார் திருமொழி உரையினும், ( கூடற்றிருப்பதிகம் ) " மணற்குன் றினீத்தகன்றூர் வருகென், றாழிதிருத்திச் சுழிக்கணக்கோதி " எனத் திருச்சிற்றம்பலக்கோவையினும் (கஅசு) " வளைத்துக்கிடந்த வரிமணற்கூடலும் " என அம்பிகாபதிகோவையினும் (௨௨௨) வருவனவற்றான் உணர்க.
3

கஅ ஐந்திணையைம்பது.

(இ - ள்) குளிர்ந்த தண்பொழிலின்கண் இருந்து பெரிய கழியையுடைய தண்சேர்ப்பன் புணர்ந்து என் செறிவளைத்தோள்பற்றி என்னைத் தெளிவித்த வஞ்சினத்தை, மாந்தளிர்மேனியாய்! மெய்யாக மறந்துவிட வல் லவோ ? அப்பூந்தண்பொழிலுள் வாழுங் குருகுகள் எ-று. (௫)

௪௬ ஓதந் தொகுத்த வொலிகடற் றண்முத்தம்
பேதை மடவார்தம் வண்டல் விளக்கயருங்
கானலஞ் சேர்ப்ப தகுவதோ வென்றோழி
தோணலந் தோற்பித்த னீ.

## பகற்குறிவந்து புணர்ந்து நீங்குந் தலைமகனைக் கண்ணுற்றுநின்று தோழி வரைவுகடாயது.

(இ-ள்) ஓதம் ஏறித்திரட்டிய ஒலிகடற் றண்முத்தங்களைப் பேதைமையுடைய மடவார் தம்வண்டற்சிறுமனைக்கு விளக்காக விருப்புச்செய்யும் கானலஞ் சேர்ப்பனே ! நினக்குத் தகுவதொன்றோ ? என்னுடைய தோழியுடைய தோள்களின் நலத்தை நீ தொலைவித்தல் எ-று. (சு)

சஎ பெருங்கட லுள்கலங்க நுண்வலை வீசி
யொருங்குடன் றன்னைமார் தந்த கொழுமீ
னுணங்கல்புள் ளோப்பு மொளியிழை மாத
ரணங்காகு மாற்ற வெமக்கு.

## தோழிக்குத் தலைமகன் சொல்லியது. தோழற்குச் சொல்லியதூஉமாம்.

(இ - ள்) பெரிய கடல் உள்ளெல்லாங் கலங்க நுண்ணிய வலைகளாலே வீசி ஒருங்குடனே தமையன்மார் கொண்டுவந்த கொழுத்த மீன் உணங்கல் களைக் கவரும் புட்களை ஓப்புகின்ற ஒளியிழைமாதர் மிகவும் எமக்கு வருத்துந் தெய்வமாம் எ-று.
(எ)

சஅ எக்க ரிடுமணன்மே லோதந் தரவந்த

நித்தில நின்றிமைக்கு நீள்கழித் தண்சேர்ப்ப
மிக்க மிருபுகழ் தாங்குபவோ தற்சேர்ந்தா
ரொற்கங் கடைப்பிடியா தார்.

## தலைமகனைத் தோழி வரைவுகடாயது.

நெய்தல். கக

(இ - ள்) திரைவந்து இட்ட இளமணன்மேல் ஓதம் தரவந்த முத்தங்கள் நின்று விளங்காநின்ற நீண்ட கழியினையுடைய தண்சேர்ப்பனே! உலகத்தின்கண் விளங்கிய மிருபுகழைத் தாங்கவல்லரோ? தம்மைச் சேர்ந்தாருடைய தளர்ச்சியைக் கடைப்பிடித்துத் தீராதார் எ-று. (அ)

சக * கொடுமுண் மடற்றாழைக் கூம்பவிழ்ந்த வொண்பூ
விடைபு ளிழுதொப்பத் தோன்றிப்—புடையெலாந்
தெய்வங் கமழுந் தெளிகடற் றண்சேர்ப்பன்
செய்தான் றெளியாக் குறி.

அல்லகுறிப்பட்டுப் பெயர்ந்தமை அறியத் தலைமகன்
சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

(இ - ள்) கொடிய முள்ளையுடைய மடற்றாழையினது மொட்டவிழ்ந்த ஒள்ளிய பூக்கள் நடுவுள்ள சோற்றான் வெண்ணெய்போலத் தோன்றி மருங் கெல்லாம் தெய்வமணம்போலக்

கமழாகின்ற தெளிந்த கடற்றண்சேர்ப் பன் நம்மாற் றெளிக்கப்படாத குறியைச செய்தான் ; ஆதலால் அல்ல குறிப் பட்டேம் எ-று. (௯)

௫௦ ‡ அணிகடற் றண்சேர்ப்பன் றேர்ப்பரிமாப் பூண்ட
மணியரவ மென்றெழுந் து போந்தேன்—கனிவிரும்பும்
புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தே னொளியிழா
யுள்ளுருகு நெஞ்சினே னாய்.

இதுவுமது.

(இ-ள்) நிலத்தைச் சூழ்ந்த கடற்றண்சேர்ப்பன் தேர்பூண்ட பரிமா அணிந்த மணியரவம் என்று கருதிச் சென்றேன்; கனிகளை விரும்புகின்ற புள்ளரவங்களைக் கேட்டு மணியரவம் அன்று என்று போந்தேன் ; ஒளியிழாய் ! உள்ளுருகும் நெஞ்சினேனாய் எ-று. (௧௦)

நெய்தல் முடிந்தது.

ஐந்திணையைம்பது முற்றிற்று.

---

* இது " பாங்கி தலைமகன் தீங்கெடுத்தியம்பியது " எனக் கொள்வர் அகப்பொருள் விளக்க உரைகாரர். (களவியல், ௪௪.)

‡ இஃது "தான் குறிமருண்டமை தலைவி பாங்கிக்கு உணர்த்தியது" எனக்கொள்வர் அகப்பொருள் விளக்க உரைகாரர் (ஷை ஷை.)

ஐந்திணையைம்பது.

செய்யுண் முதற்குறிப்பு அகராதி.

எறிந்தெமர்தாமு - கஅ

ஒல்லென்றொலிக் - உஅ

ஒல்லென்னொலிபு - உக

ஓதந்தொகுத்த - சகூ

கழிதோடுவெண் - நகூ

கானகநாடன் - கந

குளிரும்பருவத்தே - நo

கொடுந்தாளலவ - சஉ

கொடுமுண்மடற் - சகூ

கொடுவரிவேங்கை - ௧௯

கொடுவிலெயினர் - ௩௫

கொண்கன்பிரிந்த - ௪௪

கொண்டுழிப்பண் - ௨௧

கோடியர்தோற்ற - ௫

கோட்டமைவில்விற் - ௩௪

கோலச்சிறுகுரு - ௨௪

சுனைவாய்ச்சிறு - ௩௮

---

தண்வயலூரற் - ௨௭

தெண்கடற்சேர்ப்பன் - ௬௧

தேரோன்மலை - ௭

தோழியர்சூழத் - ௫௭

நூணவின்றபாக - ௧௦

நெடுமலைநண்ணூட - ௧௯

பாவையும்பந்தும் - ௫௫

பிரிந்தவர்மேனி - ௮

புனைபூந்தழையல் - ௧௪

பெய்வளைக்கையாய் - ௨௬

பெருங்கடலுள்கலங் - ௪௭

பொரிப்புறப்பல்லி - ௪௫

பொன்னிணர்வேங்கை - ௧௧

---

## பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ௯ | ௧௫ | மாயு றைவேமை | மாகி யுறைவேமை |
| ௮ | ௧ | மருதம் | ஐந்திணையைம்பது |

---

௨

திருச்சிற்றம்பலம்.

# அட்டாங்க யோகக்குறள்.

## பாயிரம்.

வெண்கோட்டன் செய்யன் கரிமுகனுள் வீற்றிருந்தென்
*னெண்கோட்டந் தீர்த்தளிப்பா னின்பு. (௧)

உலகம் படைப்பித் தளிப்பித் தொழிப்பித்
திலகுமுயி ருள்ளெம் மிறை. (௨)

†ஐந்தொழிற்கு ‡மைந்துவித முற்றமல னோடமரும்
பைந்தொடியொற் பாதநினைப் பாம். (௩)

இவர்புதல்வர் தாள்கணத்துக் கீசர் முனிவ
ரவர்பதமுஞ் சென்னியில்வைப் பாம். (௪)

செந்தமிழ்வே தாகம மாதி தெருட்டினர்தாள்
வந்தனை செய்வா மகிழ்ந்து. (௫)

ஆய்ந்தா கமத்தறைவா மட்டாங்க யோகமதை
யாய்ந்தார்தீர்ப் பாரிந்நூற் கா சு.

---

## நூல்.

இமய நியமமிணங் காதனமா §யாம
மயர்வில் பிரத்தியாகா ரம்.
தாரணை யோடு தியானஞ் சமாதியுமென்
றேரிருநான் கங்கமும்யோ குள்.

(அ)
(க)
(உ)

---

*எண் கோட்டம்—மனக்கோட்டம்.
†ஐந்தொழில்—பஞ்சகிருத்தியம்.

‡ஐந்துவிதம்—ஐந்துவித சநதி.
$ஆயாமம்—பிராணாயாமம்.

## அட்டாங்க யோகக்குறள்.

### க. இயமம்.

*அயிங்கிதைமெய் யாதி யியம மவற்றை
யியம்புவங் கேளா யினி.

(உ)
பிழைநூறு செய்தார்க்கும் †பிழையினைச் செய்யா
வழகே யயிங்கிதை யாம்.

(ங)
பொருளறச் ‡சொல்லுஞ்சொற் பொய்யாச்சொல் லாதே
பொருளுறச் சொல்க $புரிந்து.

(௪)
தேசிகர்க்குந் தேவர்க்கு மாக்கமுறச் செப்பும்பொய்
வாசகமு மெய்யெனுமெய் வாக்கு.

(ரு)
தனக்கு மிடியுறினுந் தக்காரல் லார்கைத்
தனத்தினைத் தாங்காமை சால்பு.

(௬)
உண்பானு முண்ணு துடல்வெறுப்பா னுமிகழ்சோ
றுண்பா னலனே லுவந்து.

(௮)

பெண்ணாசை மண்ணாசை யற்றும் பெரியனல
னெண்ணாதுண் பாவிழிந்தா ரில்.

(௯)

தனக்கருக மில்லா வனைத்துந் தணப்பான்
வனத்துமுனி யேமனைவாழ்ந் தும்.

(௧௦)

ஏந்திழையார் தன்சயன மெய்தித்தன் மெய்தொடினுங்
காய்ந் §துவர்த்த லேவிரத்தி காண்.

(௧௧)

இல்வாழ்வா னுந்துறவி தன்னேந் திழைதன்னை
யல்லார்பா ¶லாதரவற் றால்.

(௧௨)______________________________

---

* அயிங்கிதை—பிறவுயிர்க்கு இமிசை செய்யாமை.

† பீழை—துன்பம்.

‡ சொல்லுஞ்சொல்—பொருளறப்பொய்யாச்சொல்லாது எனக்கூட்டுக ‖ பூரிதல்—விரும்புதல்.

§ உவர்த்தல்—வெறுத்தல்.

¶ ஆதரவு—விருப்பம்.

## அட்டாங்க யோகக்குறள்.

தணந்திடுக தன்மனைவி தோளிணையுந் தான்று
*ணிணங்கவொண்ணு நாள்களெண்ணி யே.

(௧௩)

மனத்தூய்மை யென்றூர் வயிர மறுகை
தனைப்பிழைத்தார் தம்பா லுந் தான்.

(௧௪)

இயமமிவை யெல்லா மினிப்பொறை யாதி
நியமமுஞ்சொல் வாங்கேளாய் நீ.

(௧௫)

## ௨. நியமம்.

அறுத்திடுக கோப மறிவிலர்பாற் றம்மை
யொறுத்திடுவார் தம்பாலி னும்.

(௧௬)

மண்ணு நீரா லு மாற்றியுடன் மாசதன்பின்
றெண்ணீராற் றர்ப்பணமுஞ் செய்.

(௧௭)

தேசிகர்க்கு மாதவர்க்கு மேவலினைச் செய்கசிவ
பூசனையுஞ் செய்க புரிந்து.

(௧௮)

†ஆக்கத்தி னூற்ற வசமகிழ்ச்சி செய்திடுக
வாக்க மழியினுமோ வற்று.

(கக)

ஈர்ந்திடினுந் தன்னை யெதிர்மகிழ்ந்தே யெம்பாவந்

தீர்ந்ததெனக் காண்க தெளிந்து.

(உ0)

நியமமிவை யெல்லா மினிநிகழ்த்து வாங்கே

ளயர்வுளறுத் தேயா தனம்.

(உக)

## ந. ஆதனம்.

அச்சமிலா வெல்லை யகந்தானு மாதனத்துக்

‡கெச்சமிலா நல்லிடமென் றெண். (உஉ)

*இணங்க வொண்ணு நாள்கள்:—"பூத்துநீ ராடியநாண் முதலாகப் பன்னிருநாள் பூவை மார்க்கு, வாய்த்தகூ லுறுங்கால மாதவிஞ லந்நாளுண் மகமே மூலம், பாத்தசீர் விரததினந் தனக்காகா நாள்பஞ்ச பருவமெல்லா, நீத்துநூல் விதித்ததினம் புணரானேற் கருவொன்று நீக்கி ஞனல்" எனத் திருவானைக்காப் புராணத்தினும், "பூவையே யனையார் தம்மிற் பூத்தநாண் முதனு ளுன்கு, மேவிடார் புணர்ச்சி பின்னை விரும்புநாள் பன்னி ரண்டி, லேவுறு கருப்ப முண்டா மிங்கி,தி லிரட்டி நாளாண், பாவின தொற்றைநாளேற் பெண்ணெனப் பகரு நீயே" என உள்ளமுடையானிலுங் கூறின மை காண்க.

†ஆக்கம்—செல்வம்.
‡எச்சம்—குறை.

ட்டாங்க யோகக்குறள்.

ஆதனந்தா னேபதும மாதியவற் றட்டபதும

வாதனஞ்சொல் வாமேகேளாய்.

(உரு)

வலக்காற் புறமிடக்கா லுள்ளுறக் *கவான்வை

வலக்கைப் புறமிடத்து வை.

(உச)

பதுமா தனமதுதான் †மற்றையவும் பாட்டுள்

விதியறிந்து செய்க விழைந்து.

(உரு)

அன்றித்தன் னுகத் ‡தினுக்கிசைந்த வாதனத்து

ளொன்றிப் புரியலுமா கும்.

(உசு)

வரிப்புலித்தோ §லிற்கரிய மானி னதளி

னிருக்கையது வாமென்றே யெண்.

(உஎ)

இயற்றுய் வடதிசையை நோக்கி யிருந்தே

யியற்றலுமாம் §பூருவதிக் கின்.

(உஅ)

உரைத்தாமெய் யாதனந் தன்னை யினியா

முரைப்பாமா யாமாதி யும்.

(உகூ)

சு. பிராணாயாமம். (பிராணவாயுவொடுக்கம்)

¶புகவுள் ளுயிரிடையிற் பூரித்துக் கும்பித்
துகவலத்தி னாலே யொழி.

(௩௦)

---

*கவான்—தொடை.

†மற்றைய—பத்திராசனம், சிங்காதனமுதலியன.

‡ஆகம்—தேகம்.

§அதள்—தோல்.

§பூர்வதிக்கு—கீழ்த்திசை.

¶இக்குறளின் பதவுரை—உயிர்-பிராணவாயுவை, இடையில்-இடைகலை யாகிய இடமூக்கினிற்கும் நாம்பின்வழியால், உள்புக-உந்தியினுள்ளேசெல்ல பூரித்து-பூரகஞ்செய்து, (பூரகஞ்செய்தல் பிராணவாயுவை யுள்ளேவாங்குதல்) கும்பித்து - சுழுமுனைநாடியாகிய நடுநாடியிற் செலுத்தியடக்கி, வலத்தினால்-பிங்கலையாகிய வலமூக்கினிற்கு நாடியால், உகஒழி - நீங்கவிடுவாயாக என்றவாறு. "பிராணவாயுவின் குணமாவது இடைகலை பிங்கலை சுழுமுனை யென்னுமூன்று நாடிகளில் நடுநின்ற சுழுமுனையொழிய இரண்டின் வழியே மூலாதாரத்தினின்று மேனோக்கியேறி இரண்டுமூக்காலும் ஓரோர் பாரிசத்



*புடைவலத்தாற் பூரித்துக் கும்பித்துப் போக்கா

யிடையாலிவ் வாறியபற்றென் றும்.

(௩௧)

†எண்ணிரண்டு பூரிக்க வெட்டெட்டுக் கும்பிக்க
வெண்ணான் கிரேசிக்க வே.

(௩௨)

‡எழுத்துக் கியம்பிய மாத்திரைகொ ளீது
மொழிந்தியம்பு மாத்திரையு முண்டு.

(௩௩)

சகற்ப மி[illegible] தாணிரண்டா யாமன்
சகற்ப மதிகபலந் தான்.



(௩௪)

சகற்பந் தியானசெபந் தன்னோடியற்ற
கெற்பமிவை யன்றியியற் றல்.

(௩௫)

ஐந்தெழுத்துஞ் சூத்திரரல் லார்மூவ §ரோங்கார
மந்திரத்துஞ் செய்க வழக்கு.

(௩௬)

§இயற்றனுமாங் கும்பகமும் ரேசகமு மின்றி
யியற்றுநீங் கெல்லா மிறும்.

(௩௭)

---

துக்கு ஐந்துநாழிகையாகக்கொண்டு
ஒருமாத்திரையில் ௧௨௫ சுவாசமாய் ஒருசுவாசத்திலே ௧௨ அங்குலி

வாயுப்புறப்பட்டு நாலங்குலி தேய்ந்து எண் விரல் உள்ளே அடங்குகின்றது'' எனவும், "ஒருமாத்திரையாவது இரண் டரை நாழிகையை எட்டுக்கூறிட்டு ஒருகூறென்றறிக'' எனவும், "மூலாதார மாவது சரீரத்தளவு தன்கையாற் றொண்ணூற்ற்றங்குலம்; இதன்மேலே நாற்பத்தேழரையங்குலமுங கீழேநாற்பத்தேழரையங்குலமும் விட்டு நடு நின்ற ஓரங்குலம்'' எனவும் சிலப்பதிகாரவுரையிற் கூறப்பட்டது.

* இக்குறளால் முன்னர்க்கூறியதனை மாற்றிப் பிங்கலையாற்பூரகமும் சுழுமுனையாற் கும்பகமும் இடைகலையால் ரேசகமும் செய்யவேண்டுமென் றுரொ்க.

†இக்குறளிற் சொல்லப்பட் ட எண்கள் மாத்திரையைக்குறிக்கின்றன.

‡எழுத்துக்கியம்பிய மாத்திரையாவது கண்ணிமைப்பொழுதுங் கைந் நொடிப்பொழுதுமாம்.

¶ஓங்காரத்தோடு என உருபு விரித்துரைக்க.

§'கும்பகமும் ரேசகமும் இன்றி' என்றதனல் இயற்றலுமாம்' என்ப தற்குப் பூரகமாத்திரஞ்செய்தலுமாகும் எனப்பொருள்கொள்க;

௬ அட்டாங்கயோகக்குறள்.

¶திரண்டபால் கைப்புத்தித் திப்புப் புளிப்பு
முருண்ட||சுரை யாதியுநீத் துண்.
(௩௨)
அருந்திய வன்னத் தளவுறும் பாவ

மருந்துவித்தான் பாவ மறும்.

(௩௯)

ஆதலினு லற்ப மருந்திடுக வாணியுறச்
சாதிக்க யோகந் தனே.

(௪0)

*உதரபந்தம் வீக்கிடையி லுண்டவன முண்ட
†வுதகஞ் சிறுகூ டுற.

(௪௧)

## ரு. பிரத்தியாகாரம்.

பிரத்தியா காரமினிக் கேள்பிரிக்தோ ‡ரைந்தும்
விருப்பத்தின் §மீட்க விரைந்து.

(௪௨)

## சு. தாரணை.

§மனந்தன்னை யிந்திரியந் தன்னை மடக்கி
யனந்தனடி வைதா ரணை.

(௪௩) எ. தியானம்.

ஏற்றதியா னஞ்சிதமப ரேச னடிநினைவு
¶மாற்றவே நிற்கும் ||வரம்.

(௪௪)

ஒண்டொடியைக் காமுகன்ற னுன்னுதல்போ லுள்ளத்துக்
கண்டிருகங் காளன் கழல்.

(௪௫)

---

¶திரண்டபால் - வற்றக்காய்ச்சித் திரட்டிய பாலென்க.

||சுரை - சுரைக்காய்.

*வஸ்திரமுதலானவற்ருல் வயிற்றைச்சுற்றியிறுக்குங்கட்டு.

†உதகம் - நீர்.

‡ஐந்து - பஞ்சேந்திரியம்.

§மீட்க எனவே உண்ணேக்குக என்பது கருத்தாயிற்று.

§மனந்தன்னை அனந்தனடிவை எனக்கூட்டுக; அனந்தன் -சிவபிரான்.

¶வீனயவற்றிலே நினைவு மாற்ற எனவருவித்துரைக்க; நினைவு- மத்தி முதியம்.

||வரம் - மேன்மை.

## அட்டாங்கயோகக் குறள். ள.

அரிது சமாதி யடைகை யதனு
லெளிது தியான மியற்று.

(சகூ)

எளிதுதியா னப்பலமென் றெண்ணித தியானம்
*வெளிற விருப்பார் விரைந்து.

(சஎ)

பரிய வுடைகளைவர் பட்டாடை பெற்ருர்
பரியவுடை †யில்லார்க்குப் பட்டு.

(சஅ)

ஆதார மென்னநிரா தாரமென்ன ‡யோகமிரண்
டாதாரஞ் சொன்னநியா னம்.

(சகூ)

பரமசிவன் ருரூபிருட் பார்க்கைநிரா தார
மிரவுபக லற்றவிடத் தின்.

(ரு0)

அ. சமாதி.

இந்தநிலை தானே சமாதிபிந் ணேப்பெற்றார்க
§கைக்தொடுநான் கும்மடங்கு மாங்கு.

(ருக)

அட்டாங்க யோக சமாதி யடைந்தாருக்
கட்டமா சித்திகளுண் டால்.

(ரு௨)

ஆதலினுற் செக்க ருககரொரு கோடியென
நாதனை நீ நெற்றிநடு நாடு.

(ருங)

நெஞ்சந் தனினு நினைநினக்கு வேண்டுமுரு
§வஞ்சஞ் செனுஞ்சகலத் தாய்ந்து.

(ருச)

அருர்சனைசெ யன்பா லிதைய வலரிப்
றரித்துச் சதாசிவனைத் தான்.

(ருரு)

*வெளிற - இலேசாக என்பது கருத்து.

†இல்லார் - தரித்திரர். இல்லார்க்குப் பரியவுடையேபட்டு என்பது கருத்து.

‡யோகம் - தியானம்.

¶ஐந்து - பஞ்சேந்திரியம்; நான்கு - அந்தக்கரணம் நான்கு.

§அஞ்சஞ்செனுஞ் சகளம் - சிவபிரான்கொண்ட சகளவிடிவமென்னு மிருபத்தைந்து மூர்த்தம்.

அ

## அட்டாங்கயோகக் குறள்.

நின்று மிருந்துங் கிடந்து நடந்துநினை
யென்றுஞ் சிவன்றா ளிணை.

(ருசு)

முத்திசமா திக்காகு மற்றையவே மும்முறையாற்
*புத்திவிதம் வாய்க்கும் பொருள்.

(ருஎ)

அடங்கினர்க்கிவ் வட்டாங்க மாரியன்போ திக்க
விடம்பர்க் குணர்த்தின் விழும்.

(ருஅ)

சீர்வா†ரா சுத்தமர்க்குத் தேற்றினர்தேர்ந் தாருமிந்நூல்
சேர்வார் பரம சிவம்.

(ருகூ)

அட்டாங்கயோகக்குறண்முற்றிற்று.

---

☞ இந்நூல் திருக்கைலாயபரம்பரைத்திருவாவடுதுறை ஆதீனத்திற் கிடைத்தது. இந்நூலாசிரியர் பெயர் முதலியன விளங்கவில்லை இங்கே இவ்வட்டாங்கயோகக்குறளை "ஆய்ந்தாகமத்தறைவாம்" என முன்னர்க்கூறியிருத்தலால், இது சைவசமயத்தவர்க்கு ஞானசாதனமாய் மிக்கபயன்றருவதெனக் கருதி இச் 'செந்தமிழ்' வாயிலாக வெளியிடுவித்தேன்.

இங்ஙனம், திருவாவடுதுறை ஆதீன வித்வான்
சேற்றூர்-சுப்பிரமணியக்கவிராயர் சைவநூற் பரிசோதகர்
மதுரைத் தமிழ்ச்சங்கம் மதுரை.

---

*புத்தி - போகம்.

†ஆசு - குற்றம்.

உ

திருச்சிற்றம்பலம்.

# வ்ருத்தமறவுய்யும்வழி.

செம்பவள வாயன் சிவன்நக ரீங்கரன்று
ணப்பவள பாமே நபககு.

(க)

கருத்தினிற்கண் டீசனடி கட்டுரைப்பாம் பத்தர்
வருத்தமற வெய்யும் வழி.

(உ)

விருந்தர் பிணியாளர் மெல்லியலார் பாலர்
கருத்தினருச சிக்கவே கண்டு.

(௩)

உதைபத் திரவி யொளியனைய லிங்க
மிதையத் தலர்மீ திருத்து.

(௪)

ஆட்டுகவான் பாலாதி பட்டணிந்தா ரக்குழம்புஞ்
சூட்டுகவில் வாதித் தொடை.

(௫)

நிகழுமன்பாற் [1]போனக யாதி நிவேதி
கமழ்தூப தீபாதி காட்டு.

(௬)

அஞ்செழுத்தாற் சொன்ன [2]வினைத்தினையுஞ்
செய்யடைவே

யஞ்செழுத்தே மந்திரமெல்லாம்.

(எ)

[3]நெஞ்சத் தருச்சி நினைவுதவி லாகுதிசெ
யஞ்செழுத்தா [4]ஞபியபூ லார்ந்து.

(அ)

பாவனையிற் பட்ட கருடனாற் பாம்பொழியும்
பாவனைமெய் செய்யும் பலம்.

(கூ)

உள்ளேவல் செய்வாளைக் [5]காந்தன் மிகவுவப்ப
னுள்ளேசெய் பூசை யுவந்து.

(ய)

---

1 போனகம் - அன்னம்.

2 அனைத்தினையும் - ஆன்பாலாதியனைத்தையும்.

3 நெஞ்சத்தைப் பூசைத்தானமென்றும்,

4நாபியைஓமத்தானமென் றுஞ் சிவஞான சித்தியாருரையிற் கூறியவாறு காண்க.

5 காந்தன் - நாயகன்.

அலைவாக்கைக் கில்லை யருவருப்பு மில்லை
கொலையுமிலை [1]யுட்பூசை கூட்டு.
(மிக)

புறத்துஞ் சிவபூசை பூவாற் புரியா
[2]யறத்தின் மலையிலக்கே யாம்.
(மிஉ)

முட்டாதே தொட்டான் முடிக்க சிவபூசை
விட்டா னரகின் விழும்.
(மிஙு)

நெஞ்சத்துள் ளிச்சிவன்ற ணிண்ட [3]வடங் கைபூண்டே
யஞ்செழுத்தை நாவினுஞ்சொ லாய்ந்து.
(மிச)

வாக்கினொலி மந்தவொலி மானதமென் றிம்மூன்று
மாக்குங்காற் [4]றர்ச்சனிமுன ளைம்.
(மிரு)

வாக்கொலியின் மந்தம் [5]விசிட்ட மதன்விசிட்ட
மாக்கு மொலிமனத்தி னால்.
(மிசா)

மேலியற்றுய் போகம் வெறுத்தால் விரும்பினுல்
மாலையைக் கீழே மறி.
(டு௭)

கண்டி விசிட்டங் [6]கநிட்டங் [7]குசைக்கிரந்தி
[8]புண்டரிக முன்மணியும் பூண்.
(டு௮)

சிவஞ்சத்தி யான்மாத் [9]திரோதமல [10]மைந்துஞ்
[11]சிவமுதலேந் திற்சிந்தை செய்.
(டு௯)

---

1 உட்பூசை - அந்தர்யாகபூசை.
2 அறத்தின்மலே - என்றது சிவபிரானையென்க.
3 வடம் என்றது உருத்திராக்கமாலையை.
4 தர்ச்சனி - சுட்டுவிரல்.
5 விசிட்டம் - மேன்மை.
6 கநிட்டம் சிறுமை.
7 குசைக்கிரந்தி - தருப்பைமுடிச்சு.
8 புண்டரிகமணி - தாமரைக்கொட்டையாகியமணி.
9 திரோதம் - திரோதானசத்தி.
10 மலம் என்றது ஈண்டு ஆணவ மலமென்க.
11 சிவ - என்றது சிகரவகரங்களே.

முத்தி [1]வல நாடி மொழி [2]சுழுனை முற்றிரண்டிற்
[3]புத்திக் [4]கிடையிற் புகல்.

(உ௰)

[5]நெற்றிநடு மன்று ணிருமலன்ற ணுடன்பாற்
பற்றறுப்பா னன்பாலன் பால்.

(உக)

அருக்கன் சிவனென் றகிலோ ரர்ச்சி
யிருப்பாய் சிவபுரத்து ளின்பு.

(உஉ)

தாவியினைக் கோபுரத்தை யீசனெனக் கண்டுதொழு
பாவமறும் வாயா துன் பம்.

(உ௩)

[6]நின்று மிருந்துங் கிடந்து நடந்துநினை
யென்றுஞ் சிவன்ற ளிணை.

(உ௪)

வருத்தமற வுய்யும் வழிமொழிக பத்தர்க்
கிரக்கத்தா லாசா ரியன்.

(உ௫)

வருத்தமறவுய்யும்வழிமுற்றிற்று.

☞ இந்நூல், திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத் திற் கிடைத்தது. இந்நூலாசிரியர் பெயரிடங்கால முதலியன விளங்க வில்லை. அட்டாங்கயோகக் குறளிற் கூறிய 'நின்றுமிருந்து' மென்னு முதற்குறிப்புடைய குறளை மீண்டுங் கூறியிருத்தலால் அந்நூலாசிரியரே இந்நூலாசிரியரென்றும் அவர் மாணாக்கரே இந்நூலாசிரிய ரென்றுங் கூறுவர். இதில், அந்தரியாக பூசை, ஓமம், தியான முதலியவற்றைக் கூறியிருத்தலாற் சைவசித்தாந்திகட்குப் பெரும் பிரயோசனமாயுள்ளதென்று வெளிப்படுத்தேன்.

இங்ஙனம்

சேற்றூர்ச் சுப்பிரமணியக் கவிராயர்.

---

1 வலநாடி - பிங்கலைநாடி.

---

2 சுழுனை - நடுநாடியாகிய சுழுமுனைநாடி.

3 புத்தி - போகம்,

4 இடை இடைகலைநாடி.

5 நெற்றியைத்தியானத் தானமெனச் சிவஞான சித்தியாருரையிற் கூறியவாறு காண்க.

6 இவ்விருபத்து நான்காவது துறளை அட்டாங்க கூறியவாறு காண்க.

யோகக் குறளினுங்

ஸ்ரீ:

# புலவராற்றுப்படை.



## முகவுரை.

---

இவ்வாற்றுப்படை இயற்றியவர் திருக்குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரியிலிருந்த சிறிய இரத்தினகவிராயர் என்பார். இவர் இற்றைக்கு முந்நூறு வருடங்கட்கு முன்விளங்கிய செந்தமிழ்ப்புலவரும், மாறனலங்கார வுரையாசிரியருமாகிய திருமேனி, இரத்தின கவிராயரின் வழித்தோன்றலாவர். இவர் இருநூறுவருஷங்கட்கு முன் கல்வியுஞ் செல்வமும் ஒருங்கெய்தி விளங்கிய வள்ளலும், மச்சபுராணம், நீரோத்தலபுராணமுதலிய பல நூல்களியற்றியோருமாகிய இரசை-வடமலையப்ப பிள்ளை அவர்கள் பேரில் இவ்வாற்றுப்படை பாடினர். இந்நூல் திருச்சிராப்பள்ளியிலே கோல்லமாண்டு அகூஅ-ல் அரங்கேற்றப்பட்டதாக அவ்வேட்டில் எழுதப்பட்டுள்ளது. வடமலையப்பவள்ளலின் மரபினர் திருநெல்வேலியில் இன்றும்சிறப்

புற்றிருக்கின்றனர். இவ்வாற்றுப்படை சொற்சுவை பொருட்சுவை பெரிதுடைத்தாய்ப் படிப்போர்க்குப் பேரானந்தம் பயப்பது.

பத்திராசிரியர்.

உ

திருக்குருகூர்

சிறிய இரத்தின கவிராயர்

இயற்றிய

# புலவராற்றுப்படை.



## காப்பு.

வேற்றுப் படையை நரிப்படை யாக்கித்தன் வேற்படைக்குங்
கூற்றுப் படைக்கும் விருந்தூட்டும் வீரன் கொழுங்கருணை
யூற்றுப் படைக்கும் வடமலை மாலிறை யூர்ப்புலவ
ராற்றுப் படைக்குமுன் னிற்பான் செந் தூரி லறுமுகனே

அரச வடமலையே யாதுலர்தம் வாழ்வே

யிரசையர சேயரச ரேறே——முரசப்
புலவராற் றுப்படையும் போர்வேலோய் நின்மேற்
புலவராற் றுப்படைபொற் பூண்

## பாயிரம்.

* கன்ன னநவரத கல்யாணன் பார்புரக்கு
மன்ன னிரசை வடமலைமேற்——பன்னுதமி
ழேற்றுப் படைக்கு மிரத்நகவி ஞன்புலவ
ராற்றுப் படைபாடி ஞன்

## நூல்.

பார்புகழ் தெய்வப் பசுந்துழாய் பூத்த
கார்முகின் மேனிக் கருணையங் கடவு
ளண்டமு மகண்டமு மனைத்தும் பூத்த
முண்டக நாபி முளைத்தெழும் பிரம

* இச்செய்யுள் 'வடமலையப்பன் கவிராயர் பாடியது' என இ[illegible]ளது.

## புலவராற்றுப்படை

னிசைமுகப் பழமறை யீர்ந்தே னுவட்டெறி

திசைமுகப் பரிமளச் செந்தா மரையினு
மேனிலா வியமுகை மென்முலைக் குடைந்த
பானிலா வெள்ளிதழ்ப் பங்கே ருகத்தினும்
வெண்டுகில் வெண்பணி வேய்ந்துவீற் றிருந்த
பெண்டகை வெண்ணிறப் பேடை யோதிம
மறுபா ஞன்கென வமைத்தசொற் கலைபா
யுறுபாற் கடலக டுதித்தெழுந் திங்க
ளல்வழிப் புகுமென தகவிருண் மாற்றுபு
நல்வழி காட்டிய நந்தா விளக்கங்
காவிளை யாடுங் களிமயில் கடுப்ப
நாவிளை யாடு நற்றமிழ்க் கவிஞன்
கவியொடு வாதி கமகன் வாக்கியெனப்
புவியிடம் பழிச்சிய புலமை யாள
னறம்பொரு ளின்பம்வீ டாமெனு நான்குந்
திறம்பட வுணர்ந்து செப்புநா லறிஞ
னெண்பெயர் முதலா வீரைந் தெழுத்தும்
பண்புற வகுத்த பதங்க ளிரண்டு
மொருமூன்று புணர்ச்சியு மிருமூன்று விகாரமும்
வேற்றுமை யாறுந் தோற்றிய வல்வழி
தொழின்முத லாகத் தழுவுமீ ரேழுஞ்
சாரியை யுருபுஞ் சேருமிரு திணையுஞ்
செய்யுளும் வழக்குமென் றெய்துமிரு திறனு

மொருவகை தழீஇய விருவகை யெச்சமும்
வினைமுற்றுக் குறிப்புமுற் றெனுமிரு குறிப்பு
மூவகை யிடனு மூவகைக் காலமு
நால்வகைச் சொல்லும் பாலோ ரைந்துந்
தொகையோ ராறு மிகைவழு வேழுந்
தொகுத்திடு மெட்டு வகைப்பொருள் கோளு
மிடைச்சொ லுரிச்சொலென் றடுத்தசொல்
லிரண்டுடன் காட்சி முதலாங் கைக்கிளைப் பகுதியு

## புலவராற்றுப்படை

மாட்சி யியற்கை மணத்தன் முதலாக்
களவிற் குரிய கிளவித் தொகையு
முற்புணர் மகிழ்ச்சி முதலா வுரைத்த
கற்பின் வகையுங் கட்டுரை யொழிபு
மெழுத்தசை சீர்தளை யியைந்த வடிதொடை
வழுத்துபாப் பாவினம் வண்ணமீ ருகக்
கோப்புற வகுத்த யாப்பின் விதியு
முத்தகங் குளக மெய்த்தொகை தொடர்நிலை
யென்னநால் வகைத்தாய் மன்னிய செய்யுளுஞ்
செறிவுமுத லாக நிறைகுணம் பத்துடை
வைதற்ப பாகமு மெய்திய கவுடமுந்

தன்மை யுவமை தானமுத லாக
வன்மையில் பாவிகம் வரைபொரு ளணியுந
தேழூற் றிருந்த கோவைத் திரமுத
லக்கரச் சுதகமீ ருனசொல் லணியு
மிக்குள மடக்குமென வேறுவே றிசைத்த
தொல்காப் பியமுத லொல்காப பனுவலுட்
கருவி செய்கையென் றிருவகைத் தாய
வெழுத்துச் சொற்பொரு ளியாப்பணி
யெனந்துறை நிரு பழுத்த விலக்கணப் பவ்வங் கடந்து
மிலக்கிய மெனுங்கட லெளிதினிற் கடந்துங்
கலக்கும்வெங் கலிக்கடல் கடப்பரி தாகி
யீகை யென்னு மிரும்புணை யேற்றி
யோகைசேர் செல்வமென் றோர்பெருந் தீவினிற்
சேர்த்தியுயிர் காக்குந் தியாகி யென்றோர்
கீர்த்திபெறு மீகான் கிடைத்தலின் மையினாற்
றொல்லையூழ் வினையாஞ் சுழிசுழித் தலைப்பச்
செல்லல்கூ ரவாவெனுந் திரையெடுத் தெறிய
வன்பசி யென்னு மகரமீன் விழுங்கத்
[illegible] துன்ப மென்னுஞ் சுறவெதிர் பாயக்
[illegible] யென்னுங் கடுங்கரா மீர்ப்பத்

துவளுறு மேனி சோர்ந்துநடு நடுங்கியு
மன்புள சிந்தைய ராகுநட் டோரெனும்
வன்பிலா வோட்டை வங்கத் தேறலு
மப்புறத் தியங்கா தலைதலை மீதுறக்
குப்புறத் தாழ்ந்து கூட வமிழ்ந்திடு
மெவ்வழி யேனு மினிமுயன் றுய்துமென்
றவ்வழி யுஞற்று மருங்கொழிற் பாசியைப்
பற்றெனப் பற்றிப் படர்தலு ணைந்துணைந்
தற்றிடை சிதைப்ப வலக்கணுற் றிரங்கியு
மாக்க மென்னு மக்கரை சேர்துமென்
றாக்கமி லிரவெனு மோர்பசு மட்குடங்
கைக்கொடு நீந்தக் கரைபெறு கரைந் தேகலு
மக்குடம் போல வகங்கை கரைந்து
நல்குர வென்னு நடுக்கான் புகுந்து
மல்குவெந் துயராம் வனத்தீ வளைப்பக்
கிளையெனுந் தூறுகாற் றளையெனச் சுற்ற
மாயா விரவெனும வன்பேய் தொடர
வீயா வன்கண ரெனுந்தேள் கொட்ட
நெடும்பசி யென்னுங் கொடும்புலிக் கிரையாய்
மானமுங் குலமும் வண்மையும் பொறையு
ஞானமுந் தருமமு நன்மையுங் குடிபோய்க்
கருத்துறு பயமுங் கவ்வையும் பழியும்

வருத்தமும் பிணியும் வதியுமா லயமாய்க் கூய
படல்கொடு சாத்து மிடனிலா மனையுங்
காய்ந்தபுத் தோலை வேய்ந்திடாக் கூரையும்
வெளியறக் கற்றை விரித்துவான் முகட்டிற்
றுளிவிழா திறுக்கிச் சுற்று முகடும்
பொருக்கறத் தெளித்துப் பெருக்கா
முன்றிலும் கூறு புரையறத் தீற்றிப் புதுக்காச் சுவருந்
தரையலான் மெத்தை தழுவாச் சேக்கையு
மொழுகிமென் கோல மெழுதாத் திண்ணையுங்

## ௯ புலவராற்றுப்படை

கழுநீர் களைந்து பொழியாத் தொட்டியும்
பொங்கா வடுப்பும் புகையா வட்டிலு
மங்கார் பதம்வைத் தடுக்காக் குழிசியு
மயன்மனை புகுதாச் செயன்மனை யாட்டி
மஞ்சணீ ராடி வயங்கா மேனியு
மஞ்சனந் தீட்டா வயில்விழிக் கடையுஞ்
செம்பஞ் செழுதா வம்புயப் பாதமும்
வரிவளை புனையா விருகைக் காந்தளுந்

திலகம் பொறியாத் திங்கள்வா ணுதலு
பிலகுவெண் டுகில்பொறா திடுகுறா லிடையு
மைம்முகிற் காடென வகிர்ந்துசிக் கறுத்து
மொய்ம்மலர் செருகி முடியாக் கூந்தலு
நயனிலா நடையு நகையிலா முகமும்
பயனிலா மொழியும் பரிவிலா வுளமும்
பாலொடு வறந்து பசியொடு வெதும்பித்
தோலொடு திரங்கிச் சுருங்கிய முலையு
மம்முலை நெருடி யரும்பசி பொறாது
விம்முசெங் கனிவாய் மென்பசுங் குழவி
சுவைத்தலு மொருபாற் சுவைத்துளி பெறாது
நெடிதுயிர்த் தயர்ந்து துடிதுடித் தேங்கி
நோய்முக நோக்கிய தாய்முக நோக்கி
யீரித ழுண்க ணீர்கரைந் தொழுக
மூரல்வெள் ளெயிற்றின் முளைநிலா வொழுக
மழலையந் தொனிவிடுத் தழுமிளங் குரலு
முற்பட முதிர்ந்த பொற்புடைச் சிறாஅ
ரொருபொழு தாயினு மூண்சுவை காணா
திருபொழு தேமாந் திணைக்கவு ளதைப்ப
வெண்ணெய் காணாது தண்முடி காய
மிளகு காணா தொளிமுக மழுங்க
நரம்பெழுந் தென்பு நிரம்பமெய் தோன்ற
வெக்கிய வயிறு விலைபோற் குழைய

பலபல பிதற்றிக் கலகலென் றொலித்துச்
சட்டஞ்செய் துலகைத் திட்டஞ்செய்
பவர்போன்
முன்னிறை யிரட்டி பின்னிறை யேற்றி
யடுங்கோ லென்னக் கொடுங்கோல் செலுத்தி
யடியடி யென்ன வடித்தடித் தெளிய
குடியலைத் தோட்டுங் கொடியபா தகரை
யப்பிறப் பினிலே யளித்தன மதனு
லிப்பிறப் பினிலே யிப்பொருள் படைத்தே
முற்றவர்க் கின்னு முதவின் மேன்மேலு
மற்றுள பிறப்பினும வருநமக் கென்று
சொல்லவந் தவர்மனச் சூழ்ச்சி யறியாது
செல்வநிலை யன்றெனுஞ் செய்கை குறியா
தீதலே யறமெனு நீதி கருதா
துரனர் பகுவா யுணர்விலாக காகமுங்
கரவா கரைநதுணக் கண்டு தெளியாது
வாரறப் புடைத்து வட்டமிட் டெழுந்து
பூரண குடமபோற் புளகிதஞ் செறிநத
கொங்கையும் வால்வளைச் செங்கையுங் காட்டி
வாடையு மருநது மஞ்சளுங் கூட்டி

மேடைமே னின்று வெண்ணகை கோட்டிச்
சொக்கிடு மாய மைக்கணான் மருட்டும
பாசிழை யல்குல் வேசையர்க் கலது
தனம்பெரி தளிக்க மனங்கூ டாது
படிறுபல விளைத்துக் கொடிறுக வுடைக்குங்
கூர்ங்கை யல்லவர்க் கீர்ங்கை விதிராது
வறியவர்க் காணின் மொறுமொறுத் திகழ்ந்து
பகைத்தவ ரென்னத் திகைத்தெதிர் நோக்கி
யிஞ்சி தின்ற வெஞ்சினக் குரங்கென
வகங்கெட வாளா முகங்கடு கடுத்துக்
கல்லெறிந் தன்ன வல்லுரை கூறி
நாய்போற் குரைத்துப் பேய்போற் குனித்துத்



தள்ளெனத் தள்ளித் தலைக்கடை யடைத்துத்
தண்டிய குண்டோ தரன்போற் றெருந்தியும்
பண்டியும் பாவமும் பருக்கப் பருத்து
நமரிவர் நமக்கிவர் நண்பின ருரிய
தமரென வடுத்தோர் தமக்கு மெள்ளளவும்
பாத்துணா தளவில் பழம்பொருள் புதைத்துவைத்
தீத்தொகு தேன்போ லிழக்கு மூடரை
வேனிலிற் றளர்ந்து விடாய்கெட நகர்வான்

கானலை நீரெனக் கருதிச் சென்றெனக்
கற்பசு முலைப்பால் கறப்பான் புக்கென
வற்புறு மணனெய் வடிப்பா னிசைந்தென
வறிதினி லடித்துப் பெறுபயன் வேண்டி
யிரவலர்க் கொருகா சீயாக் கைகளை
வரைவிலா தளிக்கு மழைமுகி லென்றும்
பொய்யொழிந் துரையாப் புரைகொள்பாழ் முகத்தை
மையொழிந் திலங்கும் வாண்மதி யென்று
மொருவரைத் தாங்கா வுரனிலாப் புயங்களை
யிருவரைச் சிகரத் திகலுடைத் தென்றும்
வழுவறத் தேர்ந்து வடித்துநன் மதுரந்
தழுவிய நவரசத் தண்டமிழ்ப் பாகைக்
காட்டுக் கெறித்த கதிர்நிலா வென்ன
மேட்டுக் கிறைத்த விழுப்புன லென்னப்
போதமில் செவிடர்முன் னூதுசங் கொலியெனக்
கமரிடை யுகுத்த வமிர்தென வாங்கவர்
தொள்ளை மரச்செவி யுள்ளே தூஉய்
வேளையன் றின்று நாளை வம்மென்ன
வழிபல தேய்ந்து குழிபட நடந்து
நூல்கொளுந் தமிழை நுவன்றிடும் வாய்போற்

கால்களுஞ் சலித்துக் கருந்தழும் பேற
வூர்தரு சகடத் துருளே போலவும்
பேர்தரு மூசற் பிறழ்வடம் போலவும்

## ௬. புலவராற்றுப்படை

போவதும் வருவது மாவதே தொழிலாய்
நாட்செல நாட்செலத் தாழ்ச்சியாய்ப் பலமும்
பஞ்சியாய்க் கழிய விஞ்சிநீள் கலியா
விரைமுகக் கீரிமுன் வருபொறிப் பாந்தளப்
பாந்தள்வாய்ப் பட்டு மாந்து தேரை
கொடிச்சிறு தூண்டில்வாய்த் துடித்தெழு கெண்டை
பருந்துவாய்க் கவ்வ வருந்தும் பார்ப்புத்
தொகப்படு மொட்டில்வந் தகப்படும் பறவை
யாலைவாய்க் கரும்பு வேலைவாய்த் துரும்பு
வலைவாய்ப் புகுமொரு மானெனத் தியங்கி
யுலைவாய் மெழுகென வுருகிவெய் துயிர்த்துச்
சிதலை தின்ற முதுமரம் போலவும்
புல்லுரீஇ படர்ந்த சில்லி போலவு
மிளங்களி றுண்ட விளங்கனி போலவுந்
தும்பி குடைந்த தம்பம் போலவு

முள்ளுற மெலிந்து வெள்ளுடற் கோதாய்ச்
சலமதி யெனமதிச் சஞ்சலம் பெரிதுற
நாழிகை யொருநா ளொளொரு மாதம்
வாழிய மாதமோர் வருடமாய் நீடத்
திரிதரு நாளோ ரிரவிடைச் சலியா
வொடுங்கிய மெய்யன் கொடுங்கை யணையாக
வொருசிறி தாங்கே யிருவிழி முகிழ்ப்பக்
கனவுகண் டிதுவோர் நனவென விழித்தனன்
யாதோ வென்னின் மாதே கேளாய்
குடதிசைப் புறத்தோர் நெடுவரை முகட்டி
லாறுப் பசிக்கனன் மாறு துழன்று
தாகமுந் துயருஞ் சோகமும் பெருகித்
தளர்வுறு மஞ்சிறைச் சாதகச் சேவல்
கிளையொடும் பார்ப்பொடுங் கீழ்த்திசை நோக்கி
யெழுந்துசெல் பொழுதி னிளவளி கொழிக்குங்
கொழுந்திரைப் படகரைச் செழுந்திணை மருதத்



திங்நிலங் குளிர்ப்புற மின்னரம் பெழுகூற்
கருமழைக் கொழுந்து பெருமழை பொழிய
வருந்துளி யமுதம் விருந்துகூட் டருந்தி

பெல்லையின் மகிழ்வொடு மொல்லையின் மீண்டன
னீண்டிவண் வரும்வழி யாண்டொரு நெறிக்க
ணறைமலர்க் கூந்தற் பிறைமதி வாணுதற்
பவளமென் கனிவாய்க் குவளையங் கடைக்க
ணிணைத்தடக் திரண்டு பணைத்தெழு கொங்கை
யிறுமிறு மென்ன மறுகுநுண் மருங்குற்
சிலம்புபொற் சதங்கை யலம்புஞ் சீறடித்
தாயினு மன்பிற் சேயிழை பொருந்தி
கருநிறப் புயல்போன் மருவுமோர் தலைவன்
நன்மொழி மாறா தென்முன மெய்தி
விளங்குதங் கையின்மா துளங்கனி யொன்று
நன்கொடு பெறுகென வென்கையி லீந்தனன்
வாங்கினன் வல்லையி லீங்குவந் தடைந்தே
னங்கதற் குறுபய னிங்குநின் றெளியே
னத்திரைக் கேக வவனியேழ் புரக்கு
மைத்தகு திறத்தோர் மன்னர்மன் னவனு
மின்புறு பெருவள மெய்துவ துளதென
வன்புறு மனையாட் கறிவுறப் பகர்ந்து
களிப்பொடு மெழுந்து வெளிப்புறப் படுதலு
மந்தண ரிருவர் வந்தது கண்டனன்
பிறைவடந் திகழ்முலைப் பெண்ணணங் கனையவர்
நிறைகுடஞ் சுமந்து நேர்வரக் கண்டனன்

கரிக்குரீஇ யிடம்பாய்ந் திருக்குதல் கண்டனன்
கருடன்வந் திடமா யருடரக் கண்டனன் உ.;0
நன்றிகூர் நிமித்தமீ தென்றுகொண் டாடினன்
றிகழும்வெண் டாளமுஞ் செம்பொனும் வரன்றி
மொகுமொகென் றருவி முழங்கிவீழ் குன்று
மாரமுந் தேக்கு மசோகமு நாகமும்

## கக புலவராற்றுப்படை.

வேரலு மைவனம் விளையுஞ் சாரலுஞ் உ௮டு
சிறையடித் தகவுஞ் செழுங்களித் தோகையுங்
கறையடித் திரளுங் கடும்போர் மடங்கலு
முறப்புலி யெதிர்பாய் மறப்புலிக் குழாமும்
விடாவடி வள்ளுகிர்க் குடாவடித்
தொழுதியும்
பெறுகுடிக் குறவர் சிறுகுடிக் குரம்பையு
உகூ0 நிரம்பிய குறிஞ்சிப் பெரும்புலங்
கடந்தனன்
விராவரும் பராரைக் குராவு மராவுங்
காரையுங் கரிந்த சூரையு மிருப்பையுஞ்
சருகுபட் டுலர்ந்த கருகுலைங் கள்ளியும்
விடரெழுந் தெங்கணும் படர்வெயிற் கானலு

முரிசிறைக் கழுகும் விரிசிறைப் பருந்து
முன்னாய் வெருண்டிகல் செந்நாய்க் கணமு
மிடைந்தவெம் பாலைக் கொடுந்திணை
கடந்தனன்
பைங்குலை முல்லையுஞ் செங்குலைக் காந்தளு
நறுஞ்சினைக் குருந்துங் குறுஞ்சுனைக்
கலுழியுந் தாற்றுக்கதிர் வரகு
மேற்றுத்தொறு நிரையு
மதுவியல் கூந்தற் பொதுவியர் குரவையு
மன்னிய முல்லை நன்னிலங் கடந்தனன்
றடம்பணைச் செந்துறை ரடம்பின் கானமும்
விரும்புவெண் முகைமுத் தரும்புபுந் நாகமு
தாங்குபைங் குடக்காய் தூங்குமுட்
கைதையுந்
திவள்சினைப் பணிலமுந் தவழ்கழிக் கானலு
முடைப்புலால் பகருங் கடைப்படு களமு
மப்பள வளாய வுப்பள வாரமுஞ்
சைவலப் படலையுங் கைவலத் திமிலரும்
பாய்மரம் விரித்து வேய்மரக் கலமும்
பட்டின வளாகமு மட்டிலா திசைந்த
நெய்தலஞ் சூழ னெய்தினிற் சாருமுன்
மற்றதன் மருங்கில் வான்முக டளந்து

## சுற்றிய பணிக்குச் சுவர்மணி மாடமும் புலவராற்றுப்படை.



தோரண நாற்றுந் துகிற்கொடி மறுகு
மாரண வேதியர்க் கக்கிர காரமுஞ்
சித்திர முகப்புந் தேவரா லயமு

நித்திலப் பெருந்தூ ணிறைத்தகா வணமு
நித்தலும் பொழியன சத்திர சாலையு
பாடகத் திரண்முலைப் பாடகச் சீறடிச்
சூடகக் கையினர் நாடகத் தரங்கும்
வாழையும் பலாவு மடற்பசும் பூகமுந்

தாழையு மாவுந் தழைத்தபூங் காவுங்
குவளையுங் கமலமுங் குமுதமுஞ் செறிந்த
தவளையுங் கயலுந் தாவும்வா விகளு
மடைகரைப் புளினமுங் குடையுநீர் மதகு
மாற்றுநீர்ப் படுகையு மூற்றுநீர்க் கேணியுங்

கன்னலும் படப்பையுஞ் செந்நெலுங் கழனியு
முழுதொழின் மாறு மழவ ரோதையு
மாலையு மிளமரச் சாலையு மெங்கணுஞ்
சூழ்ந்துவின் னிமையவர் வாழ்ந்தபொன் னுலக
நவந்தி யொடுபோந் தவனியில் வந்தெனத்

தரையூர் சிறப்புடைப் பிரையூர் புகுந்தனன்
திருந்துபொற் கோயிற் செழுமணி முகப்பிடை நுகூறு
யிருந்தன னக்கணத் தெரிகடன் முழக்கென
வல்லியங் குறுங்கண்வாரப் பல்லியங் கறங்கத்
தண்கதிர் மதியென வெண்குடை கவிப்பத்
தேமரு மெல்லிதழ்த் தாமரை முகத்தியர்
காமரு கற்றைவெண் சாமரை யிரட்ட
யெள்ளடை நாசியர் வெள்ளடை யுதவ
வாளஞ்சு கண்ணியர் காளஞ்சி யேந்த
வொருதனித் தடக்கை யிருபிறைக் கோட்டு
மும்மதஞ் சொரியும் வெம்மத நால்வாய்
முகபட மிலகிய புகர்முக விகடப்
போதகக் கழுத்தின் மீதிலோர் புலவ



## புலவராற்றுப்படை.

னெதிர்ந்தனன் மன்னோ வெதிர்ந்தனன்
மன்னோ
வதிர்ந்தன யாவையீண் டடைகுநர் யாரென
வத்திசை நோக்கலு மித்திசை நோக்கினன்
யானெதிர் செலவவன் றனெதி ரணுகின
னொருவ ரோருட லோருயி ரிவரென

விருவரு மிருமார் பிசைந்துறத் தழுவினம்
விள்ளருங் காதன்மீ தூரமீ தூர
வுள்ளமும் வாய்மையு மொன்றுபட் டுவந்தன
நலிந்தவெங் கலியா னாடொறும் புலவ
மெலிந்தனை கொல்லோ மெலிந்தனை கொல்லோ
முற்றிய வுன்றுயர் முழுவது நீங்குதற்
குற்றது கால முணர்குவல் கேளாய்
மாரிசூழ் குடுமி நேரிமால் வரையான்
கரைபொரு தரங்கத் தரளமா நதியா
னியலிசை முத்தமிழ் யாவரு முணர்ந்து
பயிலிருங் கோளப் பாண்டிநன் னாட
னிறையூர் வளைதவ ழிறையூர்க் கதிப
னுரங்கெழு நடன துரங்க மிவர்ந்தோன்
மருவலர் வயிர மணிமுடி யிடறுங்
கருநிறக் கரடக் கடாக்களிற் றுகைய
னலமு மழகு மளவிய மாதர்கண்
ணீலமு நீலமு நீங்கா மார்பினன்
பரசிய மூவகை முரசதிர் முன்றில
னாழிசூழ் புவிபுகழ் பேழியந் துவசன்
பொருதிரைத் தலறுந் திரைதிரைத் தெறிந்த
நந்தூர் கடல்வாய்ச் செந்தூர் முதலாந்
தலமோ ராறுஞ் சிரமோ ராறு

மின்னவிர் முடியும் பன்னிரு கரமு
மழகுறப் பொலிந்த மழகளி றனைய
கந்தனை யுமையாண் மைந்தனைக் குறமான்
மோகனை வடிவேன் முருகனை மயூர



வாகனை யநுதினம் வழுத்துபே ராணையன்
றெள்ளிய கலைபயில் பள்ளியி லறிவரி
கற்குமு னேகொடை கற்றறி நிபுணன்
சற்குண லளிதன் சரசசல் லாபன்
செவியினுங் கையினுஞ் செல்பவர்க் கினியநாற்
கவியெனு மமுதமுங் கனகமு மிறைப்போன்
றன்முகங் கண்டவர் தாங்கள்பின் புல்லர்பேய்
வன்முகங் கண்டு மலங்கா தருள்வோ
னருமையும் பெருமையு மடுத்தவ ளொளிமையு
முரிமையும் பழமையு முண்மை மறிந்தோன்
மருண்டுசொற் பனத்து மிரண்டுரை யாத
சாத்திய வரன னித்திய நல் யானான்
வரையா தெவர்க்கும் வழங்குபொன் மேகங்
கரைகடந் தொழுகுங் கருணைத் தடங்கட
லியலளப் பரிய நயகுணக் குன்ற

மன்பு கனிந்த வின்பக் கொழுங்கனி
பெருமைக் களஞ்சியப் தருமக் கொள்கல
மாதுலர் திரவியம் வேதியர் தாபரங்
கற்றவர் கண்மணி யுற்றவர் பிராண
னுவலர் கற்பக மேவலர் கூற்ற
மேற்றவர் கலிநோய் மாற்றுசஞ் சீவி
தரைமுழு தாளுந் துரைகள் சிகாமணி
தந்திர விவேகி மந்திர யூகி
யொருதனி வீரப் பொருதிறற் சேவகன்
பொருமையி லுயர்ந்த பூமி பாலகன்
சிறுமையில் பெருநிதி சேரள கேசன்
சைவசித் தாந்தங் கைவரு சூரிசின்
முல்லையம் பதிசூழ் நெல்லையம் பதிவாழ்
பிடிநடைப் பூரணக் குடமுலைச் சீறடித்
துடியிடைக் கோதையெம் வடிவுடைத் தாயொடும்
வரைவனப் பெருமா னரசுவீற் றிருப்ப

௧௫ ## புலவராற்றுப்படை.

மனைத்தளங் கண்ட மணிநெடுங் கோயி
லனைத்தழ குங்கண் டமைத்தது மன்றிப்
பாவியற் றமிழ்தேர் காவியப் புலவர்

காரகம் பிதத்துடன் சிரகம் பிதஞ்செயத்
தேனூற் றிருந்து செவிதொறுங் கனிய
நானூற்றுக் கோவைபு நாற்கவி வண்ணமும
பலர்புகழ் நீரேர்த் தலபு ராணமு
சகரு மிருநிலம் புகழு மொருகலம பகமு
நீடுல குவப்பப் பாடிநிலை நிறுத்துங்
கூறுசொற் கவிதா சாருவ பௌமன்
வாரணக் கொடைபயில் காரணக்
கொடையான்
றருவொப் பெனவெழு தாரணி புரக்கு சஉ0
மிருவப் பன்பெறு மிராச குமாரன்
றெரிதமிழ்க் கூடற் பெரியகர்த தாக்கள்
வரிசைப் பெயர்பெறும வரிசைத் துரைமகன்
சிங்காச னத்துரை மங்கா மைக்குமுன்
சூரிய மூர்த்திதன் காரண வரததாற் சஉரு
பேர்பெற வுதித்த சூரிய மூர்த்தியோ
டரசர்க் கரசென வவனியேழ் புரகக
மிருவப் பனுக்கு மின்னுயிர்த் தாதை
கருவுடை மேகக் கடுஞ்சிறை தவிர்த்த
பருவுடைப் பெருமான் றிருமலைக்
கொழுந்துதன் சஙூ0 ஒருதவக் கொழுநதென வருசிவக்
கொழுநது

ஞானா கரனபி மானா பரணன்
செந்தமிழ்க் குதவுந தியாக வாரிதி
வந்தவினை தீர்த்த மகரா சனுக்கும
வாரிசூழ் கிடந்த மகிதலம் புரக்குங்
காரிகூ டற்றுறை கல்விக் களஞ்சியர்
தாயகத் துணைபெறு நாயகப் பெருமாள்
மேகவார் குழலியர் விழிமனங் கவரு
மோகநா யகனெனு மேகநா யகவேள்



வீறுள மணிய காரர்சட் டம்பி
வைத்தவா ரமுமபி மானமும் பொறுமையுஞ்
சத்தியவா சகமுந் தமிழறி புலனும்
புத்திசா துரியமும் பொலிவுறு நிபுணன்
முத்துநா யகமலர் மூவேந் தருக்கும்
பெருமைபெற் றுயர்ந்த வருமைமைத் துனவேள்
இரசைப் பதிவள ரிருவப் பனையருள்
வரிசைப் பெரியவன் வடமலை யப்பனைத்
தஞ்சமென் றடைந்தோ ரஞ்சலென் றளித்தா
னித்திறம் பாரவன் கைத்திறம் பாடின
னதலா னீயு மவனையே பாடிப்

போதியென் றுரைப்பப் புகழ்ந்தவற் பணிந்து
சிந்தையி லெழுந்த சிறுகளி முதிரத்
தந்தனை செல்வந் தமிழ்மலோ யென்னச்
சென்றனன் பொற்குடஞ் செறிந்தொளி ராடகக்
குன்றென வுயர்ந்த கொடிநெடு மாளிகைப் சுறுந்
பச்சொளி நீலப் பருக்குமிழ் செறிந்த
வச்சிர கபாடம் வகுத்தநீண் முன்றிலிற்
குடகமு மீழமுங் கடகரி நிரைப்பக்
காம்பிலி யாரியம் வாம்பரி வகுப்ப
வல்லமுந் துளுவமு மணிமுத் தளப்பக்
கொல்லமுங் கவுடமுங் குடநிதி யிறைப்ப
மகதமுங் கடாரமுங் குகுதமும் வளைந்து
கவிகையுஞ் சுடர்மணிச் சிவிகையுங் குவிப்பத்
தென்கலிங் கத்தினம் பொன்கலிங் கந்தரக்
கருநட பாளுவங் குருமணி சொரிய
வங்கஞ் சிங்கள மணிமுடி யேந்தக்
கங்கங் குலிசங் கவசம் வழங்க
மையலங் களிற்று மணிமுடி யரசர்
கொய்தபட் டாடைக் குறும்பாய் விரித்துக்
கையணை நாப்பண் செய்யகண் முகிழ்ப்ப

முறையிடுந் தெவ்வர் முறைமுறை முத்தந்
திறையிடுந் தாழுனி செறிந்தபொன் வாசலி
னின்றனன் சமையம்யா தென்று வினாதலு
மாதுலர் வழியோ ரடுத்தவ ருற்றவ
ரேதிலர் பெரியவர் யாரையு மழைத்து
வரிசையின் முறைமுறை நிரைபெற விருத்திக்
கனியுமுக் கனியு மினியபாற் குழம்பு
மிறுகுவெண் டயிரு நறியவா னெய்யு
மறுவிலா வடிசிலு மலிநறுந் தேக்கெறிய
வறுசுவைக் கறியொடு மன்பொடு மருத்தி
மணந்துணிந் தெவர்க்கும் வணாயா தகம்பொன்
றினந்தினம் பொழியுந் தியாக மண்டபத்துச்
சூரிய படத்தாற் றுலங்குபூந் தபூவணை ச
சீரிய தமனியச் சிங்கா தனத்து
வேதிய ரொருபால் விருந்தின ரொருபால்
வாதிய லேழிசை வல்லவ ரொருபாற்
காவல ரொருபாற் கவிமழை பொழியும்
பாவல ரொருபாற் பதிந்துசூழ்ந் திருப்ப
விருந்தவன் விளைந்தாங் கெழுந்தெதிர்
வந்தனன்
பரிந்துமுன் னெடுநாட் பழகுநண் பினர்போன்
முற்றவத் துறுபய னுற்றதின் றென்றனன்

வருகவென் றொருகை யிருகையிற் றாங்கினன்
வியப்புட னுள்ளே பயப்பயக் கொடுபோய்த்
திருத்திக ழாசனத் திருத்தி யிருந்தனன்
முளரியின் மலர்மகள் முகமலர் குடிகொள
வொளிபெற வெனதுட லுளமொடு புளகெழ
விதிவிளை தெறுகலி விடைகொள வருண்மழை
குதிகொள விணைவிழி குளிர நோக்கினன்
குருமணி மகரக் குழைக்கா தழக
வருள்பரி மளிக்கு மம்புய விலோசன
சுந்தர சீதள சந்திர வதன

## புலவராற்றுப்படை. கஅ

மடலவிழ் குவளைமேல் வரியளி துளிநறை
யிடையிடை பொதுளிய விருபுய பூதர
கொடியிடை மடவியர் குடமுலை மிருகமதம்
வடிபுழு கொடுகமழ் வரைநெடு மார்ப
தியாகவை போகபூ லோகதெய் வேந்திர
பலகலை நிபுண பார்த்திப சேகர
கலியுக கன்ன கருணை கடாக்ஷ
மதுரித வசன விதரண சூர
விரவலர் தவமே மருவல ரிபுவே

கற்றவர் துணையே யுற்றவ ரரிதோ
முதியபாட் டமுதே மதுரையிட் டரசே
பிரசையப் பதிவாழ் கருணையங் கடலே
வடமலை சாயினுந் திடமலை யாமெனக்
கடமலை யழையா வடன்மலை யெய்தித்
தடமலை யேந்தும வடமலை வேந்த
வென்றிசொன் மதுர வியற்றமி ழிசையொடுத்
துன்றநற் பொருளொடுஞ் சுவையுறக் கேட்டனன்
பெருகிய வுவகை கரைகடந் தேற
மூட்டுபொற் கஞ்சுகப் பூட்டற நிமிர்ந்து
வெற்றிகொண் மணிப்புயம் வீங்குறப் பலகா
னன்றாநன் றென்ன நன்முடி யசைத்தனன்
பொருகென வெழுந்து ராககறை திறந்தனன்
பகைத்திடு மரசர் திகைத்திட நாளுந்
திறைகொணர்ந் தளித்த நிறைபசுங் கனகஞ்
செய்யபட் டாடை துய்யமென் றூசு
மின்னிய சரப்பணி பின்னுபொன் னரைஞாண்
மணிவிர லாழி யணிமணிக் குண்டல
நித்தில மாலை சித்திர மகுட
நவமணிப் பதக்கங் கவின்மணித் தண்டிகை
வேண்டுவ வேண்டுவ விரைந்திவை முதலா
வாண்டகை கொள்கென வன்பொடும் வழங்கினன்

போற்றுசெந் தமிழ்முரு காற்றுப் படைக்காச்
செந்தில்வாழ் முருகன் வநதுநக் கீரன்
வன்சிறை தவிர்த்தென வென்சிறை தவிர்த்தனன்
றன்கட னென்றென் கடன் தீர்த்தனன்
மாடுந தொழுவும வயலுந தோட்டமும
வீடும் விளககும விளஙகுறச செய்தன
னொருகுறை யிலலா துயர்நதன னெளியேன்
பெருகிய சுற்றமும பெண்டிரு மககளும
கற்றபா வலருஞ சுற்றவா துலருஞ
சூழ்ந்துவாழ் வுறவினி தாழி
வாழ்நதவன் புவிமேல வாழி வாழியவே.

முற்றும்.

---

க கோதிச்சிக கின்றி முடி ககின்ற மாலைக குழலிவிடு
தூதிச்சிக் கின்றுசெங காவிநல காய்துணைக கண்கறுத்து
மோதிசசிக் கென்று பணைநதிறு மாநத முகிண்முலைபபூ
மாதிச்சிக கின்றபொன மார்பா விரசை வடமலையே.

உ ஆலைக் குவளைககும விறககும பான்கணை

யைநதுமவநதென்

சேலைக குவளைக கிடர்செய்பு மோதிரை நீரபடிநத
வேலைக் குவளைககங காநதாய் நருமழை வெளளநதுள்ளு
மாலைக குவளைப புயததா யிரசை வடமலையே.

௩ மேல்வளைக குமபணி கீழ்வளைக் குங்கடல்
வேள்கருமபைக

கால்வளைக் குநதொறுங் கைவளைக கேபயங் காமர்மள்ளர்
சால்வளைக் குங்கொழுக காலவழிபோய் முத்தந தட்டுகுட
வால்வளைக் கஞ்ச வயலசூ ழிரசை வடமலையே.

௪ ஈர்க்கிடை போகப் பொருமுலை மாலை யிளம்பிறையாற்
பார்க்கிடை யானது பார்ககிலை யேயெதிர்
பாறிட்டொன்னர்

நீர்க்கிடை போனெகி ழாமனம் பேதிக்க நேரிடும்போர்
வார்க்கிடை வேற்கை யுபங்கா யிரசை வடமலையே.



௫ படைத்தலை வாளை நிகர்போ மலர்க்கணை பாயநொந்து
சடைத்தலை வாளை முகம்பார்க் கிலாயலை தத்துதெண்ணீ
ருடைத்தலை வாளை விரிமுத்த ராசி யொதுக்கியவாய்
மடைத்தலை வாளை குதிபா யிரசை வடமலையே.

௬ முடக்கால் வளைக்கும் பிறைக்கீற் றுக் கண்டபின் மோகமென்னு
லடக்கா வகைகை கடந்ததெண் ணைமர்க் குந்தமிழ்க்கு
மிடக்கா லெனினு மொருக்கான் மனங்கொண் டெடுத்தவடி
மடக்கா முழுவல் லமையா னிரசை வடமலையே.

௭ கூலிக்கு நான்சொல் வதோயெம்ம னோர்நின் கொழுங்கருணை
வேலிக்கு ணின்ற பயிரலல வோவெறுங் கான்புகுந்த
நீலிக்கும் ராவணன் மோலிக்குங் கும்ப நிகும்பனுக்கும்
வாலிக்கும் வாளிதொட் டாயிரை யூரில் வடமலையே.

௮ பொரிந்தது முத்தம் புகைந்தது சாந்தம் பொருக்கெழுந்தே
கரிந்தது பூவணை யேஆப டாள்பணிக் கால்பரப்பி
விரிந்தது வான நிலாவெள்ளங் காணுன்னை விட்டொருநாட்
பிரிந்ததற் கித்தனை யுண்டோ விரசைப் பெரியவனே.

௯ இரசைப் பதியில் வடமலை ராயன்றெய் வேந்த்ரனென்னப்
புரசைக் களிற்றிற் பவனிவந் தான்வந்த போதிலென்பெண்

ணரசைக்குறித்தின் றுபோர்க்கோலங்கொண்டவனங்கன்வெற்றி
முரசைப் பறித்துடைப் பாரில்லை யோவமர் மூளுமுன்னே.

க0 ஏர்விற் றுப் பள்விற் றுடைமையெல் லாம்விற்
றிருந்தமனைச்
சீர்விற் றனமுன்னைக் காணாத முன்றெரி சித்தபின்பு
போர்விற் றடக்கை யிளையூர் வடமலைப் பூபதிநின்
பேர்விற்று முன்விற்ற தெல்லா மறுபடி பெற்றனமே.

வேறு.

கக பொருந்து திக்கைக் கருங்கங்குல் யானையான்
புறப்ப டும்படைப் போர்க்கிலக் காய்மலைத்
திருந்து திக்குத் திகையறி யாதுவிண்
ணெழுந்து திக்கு மிளம்பிறைக் கேங்குமோ

[illegible] *புலவராற்றுப்படை.

வருந்து திக்கற் புடையா ளசோதைதமூத்
தாமேம் ரத்னை முழுமணி யேயனை
வருந்து திக்கப் புகழ்படைத் தாய்சின்ன
வடம லேந்திர மகராச ராசனே.

கஉ 'இங்கனையு மொருகணைவிட் டிருகணையுந்
துயிலவொட்டா திரவெல்லாம்வர

தைங்கணேவேள் பொருவதெல்லா மறுகணேவே
ணியனறிவான் யாரைரோவேன்
கொங்கணேயும பங்கயமேற் குருகணேய
முருகணேயும் குமுதாதோறுஞ்
சங்கணேயும வளவயலசூ ழிரசைவட
மலேயேமுத் தமிழ்வல லோனே.

கஙு முடிக்கு மருபபுக கிருநதபைங கோதைப்பெண்
மூரிவில்வே
பிடிக்கு மருபபுக கணே நகிலக கோசிறைப
பேரிட்டொன்ஞர்
குடிக்கு மருப்புக் கடலேற்றி விறபக கொடிமதில்பாய்ந
திடிக்கு மருபபுக் களிற்றூ யிரசை யிருபபவனே.

கச பாடுவன் பாடுவ தல்லாமற பாவலர் பாடலுங்கொண்
டாடுவன் செய்வ னிரையூர் வடமலே யனறிபபுலலன்
றேடுவன் றேடிப் புதைபபா னவனுககுச செநதமிழென்
வேடுவன் சேரியி லெவ்வாறு நாணம விலேசொலவதே.



# கஞ நூல்.
## முகவுரை.

தமிழிற் 'கனாநூல்' எனப்பெயரிய ஒரு நூலுண்மை **சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார்** உரையாற் பலரும் அறிந்தது. யான் இத்தமிழ்ச் சங்கத்திற்கு ஏடுதேடிச் சென்ற காலத்தில் இந்நூற்பிரதி ஒன்று ஆழ்வார் திருநகரிற் கவிராயனருதர் வீட்டினின்று கிடைத்தது. இதனிற் சிலப்பதிகார உரைக்கண் அடியார்க்கு நல்லார் எடுத்தாண்ட கனாப்பயனைப் பற்றிய பாடல்கள் நான்கும் சிலபாட பேதங்களுடன் உள்ளன. இது, அடியார்க்குநல்லார்க்கு முற்பட்ட பழையதோர் நூலாதலால், கால நீட்சிபற்றி எழுதுவோராற் பாட பேதங்கள் நேர்ந்தனபோலும்! இந்நூலால், கனவுப்பயனைப்பற்றி முதலில் தேவகுருவாகிய வியாழனால் ஓர் நூல் செய்யப்பட்டுள்ளதென்றும், அதன் பொருளை விளக்கி **அம்பர்** என்னும் நகரத்திருந்த **கணபுரத்தேவன்** என்பான் சொல்ல, அவன் சொன்னவாறு **போன்னவன்** என்பான், இந்நூலை அந்தாதியாக முப்பது பாடல்களாற் செய்து அமைத்தான் என்றும் ஊகிக்கப்படுகின்றன. தேவகுரு செய்த கனாநூல் வடமொழிபோலும்! "எந்தை கணபுரத்தேவன் றன் கட்டுரையே" என இந்நூல் ௨௯-ம் பாடலிற் காண்டலால் இந்நூல்செய்தான் கணபுரத்தேவனாகாமையும், "கட்டுரை

யார்மகப் பொன்னவன் சொன்ன கனவுநன்னூ, லெட்டு மிரண்டு மிருபதும்" என இதனிறுதிச் செய்புளிற் கூறப்பட்டமையால் இம்முப்பதுபா டலும் இயற்றினேன் பொன்னவன் ஆதலும் அறியத்தக்கன. "எந்தை கணபுரத்தேவன்" எனவும், "மகப்பொன்னவன்" எனவும் உண்மையால் இந்நூல் செய்த பொன்னவன் அம்பர்க் கணபுரத் தேவற்கு மகன் எனினும் அமையும்.

பத்திராசிரியர்.

---

உ
கடவுள்துணை.

# கனா நூல்.

க திருத்தங் கமலத்து மாயனைச் சேவடி சேர்த்தியம்பர்
குருப்பண் டுரைத்த கனவுநன் னூலைக் குழைத்தெழுந்த
கருத்தங் கியபொழி லம்பர்க் கணபுரத் தேவன்சொன்ன
னருத்தம் பயிலுந் தமிழ்ப்புல வோர்த மருள்படைத்தே.

உ படைத்தமுற் சாமத்தொ ராண்டிற் பலிக்கும்

பகிரண்டாய்க்

கிடைத்தபிற் சாமத்நிற் றிங்களெட் டாவதிற்

கிட்டுமென்ப

ரிடைப்பட்ட சாமத்து மூன்றினிற் றிங்களுண்

மூன்றென்ப

கடைப்பட்ட சாமத்து நாட்பத்தி லேபலன் கைப்பெற்

[ராற்

[றதே.

௩ பெற்றம் பசுமன்ன ரானை குதிரைபொன் காணப்பெற்றூற்
சுற்றந் தழைக்குந் துயரங் கெடும்புளிச் சூதமுதன்
மற்றுந் தழைத்த பசுமரம் பான்மர மேறிநின்றே
யுற்றங் குணரி னலம்வந்து கூடுமென் றோதினரே.

௪ ஓதும் பசுவு மிடபமும் யானையு மோங்கல்களுஞ்
சீர்துன்று கோயிலு மேறிடக் காணினுந் தீமலத்தை
மீதொன் றடிமுடி பூசிடக் காணினு மெல்லியலார்
சூதென்ற கொங்கைத் துணைநலம் வாய்த்திடச்
சொல்லினரே.

௫ சொல்லுங் கனவினிற் றுனேபிற் சாகிற் சுடரரவம்
பல்லொன் றுறவலத் தோளிற் கடிக்கிற் பலவிதத்தாற்
செல்வம் புகுந்திடுந் தேளட்டை பாம்பிவை

சேரப்பெற்றான்
மல்குந் திருவொடு புத்திர லாபமும் வந்திடுமே.

௬ வந்துற்ற கோவின் மலைகடல் யாவும் வருமுறையே
யந்தத் தளவுஞ்சென் றேறப்பெற் றாலடை யார்மகுடஞ்
சந்திக்கும் வையகந் தம்வச மாம்பெருங் கண்ணியடன்
முந்துற்ற நெய்பா லடிசில்கண் டாலு முடிமன்னனே.

கனநூல். ௯

௭ முடிசெய்த வன்றிலுங் கொக்குங் கிளியு முயங்கப்பெற்றாற்
பிடிசெய்த மின்னிடைக் கன்னியைச் சேரப்
பெறுகவென்
தொடிசெய்து தோளுக்குக் கட்டினுங் கைத்தலை
சூழ்ந்தி [னுங்
வடிசெய்த வெற்கணல் லாய்மக்கட் பேறென்று மன்னு
[டினும்
[தியே. ௮
மன்னிய வாகன மேறுஞ் சிவிகை மணிசயனந்
தன்னுடை யாசன மேறினின் றேரட லேறிழிந்தால்
பைக்கல மாகிய செல்வமுண் டாகும் பலவிதத்தாற்
பின்னிய கோதைநல் லாய்பிணங் காணில்

பெருஞ்செல்வமே.

கூ செங்கதிர் மொண்டு ங்க மொன்றிவை காண்கிலுஞ் செல்வமு
மங்கைமை நோய்கொ ண்ட நாட்களிற் காண்கிலந் நோய் [ண்டா
பொங்கிய கள்ளுங் குருதியும் பூசிடக் கண்டிடின்மேற்[தவிரும்
றங்கிய வேள்விக் குலத்தார் நமக்குந் தனமிகுமே.

க0 மிக்க வெயிற்றினங் கோட்டின மேனம் விறற்குரங்கு
தொக்கன தம்மைக் கனவிடைக் காண்கிற் சுடரரவஞ்
சக்கர வர்த்திக ளாற்பய முன்பிதன் பன்முறித
லுக்கன வாதல்கண் டாற்பொருடோற்ற லுடைத்தென்பவே.

கக உடுத்தசெவ் வாடையும் பூசிய சாந்தமு மோதியின்மேன்
முடித்தசெம் பூவு முடையா ளொருத்தி முயங்கிடுமேற்
பிடித்திடும் பாதகம் பீதக வாடையும் பேதகமே
படித்துஞ்செம் பூவின் முடியாண் முயங்கிற் பரும்பிணியே.

கஉ பிணையல் கறுத்தது சூடிப் பெருங்கருஞ் சாந்தினையே
யணிவது செய்து கறுத்த துடுத்தங்கொ ராயிழையாள்

புணர்வது செய்திடிற் கூற்றங் குறுகிடும் போர்க்களத்தே
கணைபொழி மாரிகண் டான்மழை யாமெனக் கட்டுரையே.

கங கட்டிய வாடையும் பூசிய சாந்தமுங் கார்க்குழன்மேற்
சூட்டிய பூவும் வெளுத்தன கொண்டொரு
தொண்டைச்செவ்வா
யிட்டிடை மாதர் புணரக்கண் டாலிருங் கீர்த்தியுண்டாய்
மட்டவிழ் பூங்கொடி சேருமென் றோதி வகுத்தனரே.

ச· களுநூல்.

கச வருத்ததன் மேனியின் மேலெண்ணெய் பூசினும்
வல்லபத்தான்
மிகுத்தங்கொ ராடை யுடுப்பினு மேனி தனில்விளங்கப்
பகுத்துட னோர்சுற்றுக் காணினும் பல்கலை நூலின்வல்லோர்
தொகுத்தநன் மாதவர் நோய்கொளென் வாரென்று சொல்லு
[வரே.

கரு சொல்லத் தகுமுகட் டொட்டகம் வெட்டுந் துணைமருப்போ
டில்லத் தெருவும் கழுதையின் றிங்கிவை யேறிநின்றே
மெல்லத் தரையிலுழவ்தன் முன்னம் விழித்திடுமேற்
கொல்லத் தலைவரு மாற்றருஞ் சீற்றத்திற் கூற்றுவனே.

கசா கூறிய வங்கத்தி லேறிற் குரைகட லிற்குளியா

தேறிக் கரைபுகக் கண்டிடிற் றன்பர தேசத்திற்போய்த்
தேறித் தனங்கொண்டு மீளுஞ் செழுங்கள்ளு
நீரும்பெற்றால்
வீறிட்ட லாபமும் பேறுமுண் டாகும் விரைக்குழலே.

கஎ விரைமலர்த் தாளிற் செருப்பு மிதியடி மென்குடையென்
றுரைசெயத் தக்கன கூறிய வாயுத மொண்கனவா
லிரவிடைக் கண்டிடிற் றன்பர தேசத்தில்
யாத்திரைபோம்
பரவிடத் தக்கன வாட்கே டிவற்றிவை பற்றிடுமே.

கஅ பற்றிடுங் கீர்த்தி யணிகள்பெற் றுளின்பம் பால்பருகி
லற்றிடுந் துன்பந் தயிர்பெறிற் பொன்பெறு மப்பந்தின்று
லுற்றிடுந் துன்பம் வருகுஞ்செஞ் சாலியு முப்புமெள்ளும்
பெற்றிடு மின்ப மிறைச்சியுண் டாலும் பெருநலமே.

கசு பெருமா னிடந்தன் னிறைச்சியைப் பொன்னிறம்
பேணிச்சுட்
டருமா னொருத்தி தளிர்க்கையி லிட்டுத் தரத்தின்னுமே
[டுத்
லருமா நிதியமைஞ் ஞூறு புயந்தின்னி லாயிரமாம்
வருமான் றலைதின்னின் மன்னவ ராமென்று வைத்தனரே.

உ0 வைத்ததோர் பாசத்தி னூன்மலை சுற்றிடின் மண்டலிகற்
குற்றதோர் வான்பய முண்டென்பர் பாசங்கொண்
டோர்வளைக்கி
லத்தல மாள்கின்ற மன்னவற் காமென்ப ரம்புயப்பூஞ்
சித்திரஞ் சேருந் துவசம்பெற் றாலுந் திருவருமே.

## கஞநூல். ரு

உக திருவரு மென்ப ரெரிவது கான்கிற் புகையைக்கண்டால்
வருவது நோயென்பர் வானவர் செற்றலர் மாதவத்தோர்
பொருவரு பூண்முலை யாரொடு பூசுர ரென்றிவர்க
ளொருவரு டன்சொல்லிற் சொல்லிய நன்மை
யுறுமென்பரே. உஉ என்பும் பருத்தியு நீறுமவெண் சோறு
மினிதுவைத்த
வன்புறு மோரிவை யைந்துந் தவிர வெறுத்தவெல்லா
மின்பந் தருமென்ப மேனியெல் லாமெறும் பூரக்கண்டாற்
றன்பந் தவிர்ந்து நலங்களெல் லாமவந்து சூழ்ந்திடுமே. உங
சூழுங் கரியும் பரியுஞ் சுர நந் தலைக்குழுக்கால்
வாழுந் தலத்துறு மாமறை யோரும் வருமுலைப்பா
ரூழும் பசுவிவை யைந்துந் தவிரத் தறுத்தவெல்லாம்
யாழுங் குழலுமம் புரையுஞ்சொல் லாயலவை யெய்திடுமே. உச
எய்திடுஞ் செல்வ மனைநகப் பெற் றாலெழில் மேகமெங்கும்

பெய்திடக் கண்டிடிற் பூரணுண் டாகுமயின் னைக்காசி
கைவது செய்கிடு நஞ்சடர் வேல்விழி யாகரிகிர்
கொய்திடுஞ் சாகமுங் கொள்ளியுந் தான்கொள்ளி
னேய்கொள்

[னுமே.

௨௫ கொள்ளும் பலாப்பழஞ் சாமை முதிரை குறகிடினே
யெள்ளும் வரகும பெறினின்பமாமப்பிற ரெசசிற்
கொண்டா
னள்ளும் பெருமபுக [ழலலற் றநமென்னுஞ் சேகரஞ்சீர்
தெள்ளு மனவர தங்கள்பொன்] போற் செல்வஞ்
சேர்ந்திடுமே. ௨௬ சேற் றட் புகினு மிருட்டறை சேரினுஞ்
[சேகரஞ்சீ]
ராற்றுக் குளிப்பினு மாம்பிலஞ் சேரினு மாங்கமுகங்
காற்றுப் பொலியய லல்லற் றவிருக தனதுபுகழ்
போற்றித் தொழவந்த மாற்றலர் போற்கெடும்

பொய்யலவே. ௨௭ அல்லலுண் டாகு மிரந்திடிற் கட்டிலி
லப்பந்தின்றுற்
செல்வமுண் டாகுஞ் செழுமணிப் பூணைச் சிலபறித்துப்
புல்லர்கொண் டோடினுஞ்
செல்வமும்போஞ்சுரை பூசணிக்காய்
கொல்லையஞ் சாரல் வரையினிற் காய்பெறிற்

குற்றமுண்டே.

[

] இவ்வடையாளமிட்டவிடங்கள் நன்கு விளங்கவில்லை.



# கனாநூல்.

உஅ உண்டா கியபசு வேறு மறிந்து முரைத்தவற்றிற்
றண்டா மரங்களி லேறி மறியினுந் தானமன்னர்
கண்டா ரிகழத் திரியினு நோயிற் கலந்திடினும்
வண்டார் குழன்மட வீர்சாவு கேடு வரும்பிணியே.

உகூ பிணியடைந் தார்க்குப் பிணிகெடு மாற்றலர் பீடழியத்
துணிகவெண் கூறையைச் சுற்றிச் சுழிப்புன
னீந்துவரேற்
றணிவினற் றோரு கன்னியைச் சாரப்
பெறுகவென்னுங்
கணிதரு மெந்தை கணபுரத் தேவன்றன் கட்டுரையே.

ஙo கட்டுரை யார்மகப் பொன்னவன் சொன்ன கனவுநன்னூ
லெட்டு மிரண்டு மிருபது மோத விரவிற்றந்து
முட்டிய தீய கனவின்பொல் லாங்கறு மொய்குழலீர்
சட்டென முட்டிடு நல்லக ணக்க டருந்திருவே.

---

☞ உ, ச, கo, கரு பாடல்கள், சிலப்பதிகாரம், கரு-அடைக்கலக் காதை, கூரு—கoரு அடிகளின் விசேடவுரையில் அடியார்க்கு நல்லாரால் மேற்கோளாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. பாடபேதத்தை நோக்கிக்கொள்க.

---

# வளையாபதிச் செய்யுட்கள்.

---

க உலக மூன்று மொருங்குட னேத்துமாண்
டிலக மாய் திறலறி வன்னடி
வழுவி னெஞ்சொடு வாலிதி னாற்றவுந்
தொழுவ னொல்வினை நீங்குக வென்றியான்.
(தொல்காப்பியம், செய்யுளியலுரை மேற்கோள்.)

உ வினைபல வலியினாலே வேறுவேறி யாக்கையாகி

நனிபல பிறவிதம்முட் டுன்பு றாஉம் பல்லுயிர்க்கு
மனிதரி னரியதாகுந் தோன்றுத லேன்றினைவு
மினியவை நுகரவெய்துஞ் செல்வமு மன்னதேயாம்.

௩ உயர்குடி நனியுட்டோன்று லூனமில் யாக்கையாதன்
மயர்வறு கல்விகேள்விக் தன்மையால் வல்லராதல்
பெரிதுணர் வறிவேயாதல் பேரறங் கோடலென்றுங்
கரிதிவை பெறுதலேடா பெற்றவர் மக்களென்பார்.
(புறந்திரட்டு, பேறுதற்கருமை-௩-எ)

௪ நாடு மூறு நனிபுகழ்க் தேத்தலும்
பீடு றும்மழை பெய்கெனப் பெய்தலுங்

---

* " தரவின்றாகித்தாழிசைபெற்றும் " என்னுந் தொல்காப்பியச் செய் யுளியல் கசஅ-ம் சூத்திரவுரையில் " இதனுனே தொடர்நிலைச்செய்யுளின் முதற்கணின்ற தேவபாணி தன்பொருளொடு தான் முடிந்தன, தனித்தரவு கொச்சகமாம்; உ-ம். ' உலகமூன்று ....... ....வேன்றியான் ' ' மூவாமுதலா .......சேர்துமன்றே ' எனவரும் இவ்வளையாபதி முதலியவற்றுட் டேவபாணி யல்லாத தொடர்பொருட் செய்யுட்களை யாப்பினும் பொருளினும் வேற்

றுமையுடையதென்றதனுற் றாவுகோசசகம் என்று கொள்க; அவை தம் பொருளொடு தாமுடியாமையின். ” என ஆசிரியர் நச்சினர்க்கினியர் கூறு மாற்றன், இது, வளையாபதிச் செய்யுள் என்பது விளங்குகின்றது.

உ

## செந்தமிழ்.

கூட லாற்றவர் நல்லது கூறுங்காற்
பாடு சான்மிகு * பத்தினி யாதலே.

(ஷை, கற்புடைமகளிர்-கக.)

ரு பள்ள முதுநீர்ப் பழகினு மீனினம்
வெள்ளம் புதியது காணின் விருப்புறாஉங்
† கள்ளவிர் கோதையர் காமனே டாயினு
முள்ளம் பிறிதா யுருகலுங் கொண்ணீ.

சு உண்டியுட் காப்புண் டுறுபொருட் காப்புண்டு
கண்ட விழுப்பொருள் கல்விக்குக் காப்புண்டு
பெண்டிரைக் காப்ப திலமென்று ஞாலத்துக்
கண்டு மொழிந்தனர் கற்றறிந் தோரே.

எ எத்துணை யாற்று ளிடுமண னீர்த்துளி

புற்பனி யுக்க மரத்திலே நண்மபி
ரத்துணை யும்பிற ரஞ்சொலி ஞர்மனம்
புக்கன மென்று பொதியறைப் பட்டார்.

அ தளிப்பெயற் றண்டுளி தாமரை யின்மேல்
வளிப்பெறு மாத்திரை நின்றற் றெருவ
னளிப்பவற் காணுஞ் சிறுவரை யல்லாற்
றுளக்கிலர் நில்லார் துணைவளைக் கையார்.
(ஷை, கற்பின் மகளிர்—அ, கூ, கய, கக.)

கூ பொறையிலா வறிவுபோகப் புணர்விலா விளைமைமேவத்
துறையிலா வனசவாவி துகிலிலாக் கோலத்தூய்மை
நறையிலா மாலைகல்வி நலமிலாப் புலமைநன்னாச்
சிறையிலா நகரம்போலுஞ் சேயிலாச் செல்வமன்றே.
(ஷை, புதல்வரைப்பெறுதல்—எ.)

---

* 'பத்தினிக்காவதே' எனவும் பிரதிபேதம்.

† "வெள்ளம் பழகினும் வேற்றோர் முகம்பெறின்" எனவும் பிரதிபேதம்.

க0 ஆக்கப் படுக்கு மருந்தனை வாய்ப் பெய்விக்கும்
போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்குங்
காக்கப் படுவன விந்திரிய மைந்தினு
நாக்கல தில்லை நனிவெல்லு மாறே.

(௸, அடக்கமுடைமை—கக.)

கக தார நல்கிநந் தாங்கித் தலைநின்றி
ஊரு நாடு முவத்த லொருதலை
வீர வென்றி விறன்மிகு விண்ணவர்
சீரி னேத்திச் சிறப்பெதிர் கொள்பவே.

கஉ பெண்ணி னாகிய பேரஞர் பூமியு
ளெண்ண மிக்கவ ரெண்ணினு மெண்ணிலார்
பின்னி நின்ற பெருவினை மேல்வரு
மென்ன தாயினு மேதில்பெண் ணீக்குமின்.

(௸, பிறர்மனைநயவாமை— அ, கூ.)

கங பொய்யன் மின்புறங் கூறன்மின் யாரையும்
வையன் மின்வடு வல்லன சொல்லிநீ
ருய்யன் மின்னுயிர் கொன்றுண்டு வாழுநாள்
செய்யன் மின்சிறி யாரொடு தீயன.

கச கள்ளன் மின்கள வாயின யாவையுங்
கொள்ளன் மின்கொலை கூடி வருமற

மௌ்ளன் மின்னில ரென்றெண்ணி யாரையு
நள்ளன் மின்பிறர் பெண்ணொடு நண்ணன்மின்.

( ஷ, தீவினையச்சம்— அ, சு. )

கரு துற்றன வாகத் தொகுத்து விரல்வைத்த
தெற்றுக்கலை தென்னி னிதுவதன் காரண
மற்றமி ருன மெனைப்பல வாயினுந்
துற்றவி ழொவ்வாத் துணிவென்னு மாறே.

( ஷ, தானம்— கo. )

கசு ஆற்று மின்னரு ளாருயிர் மாட்டெலாந்
தூற்று மின்னறந் தோநனி துன்னன்மின்

ச சேந்தமிழ்.

மாற்று மின்கழி யாயமு மானமும்
போற்று மின்பொரு ளாவிவை கொண்டுநீர்.

கள பொருளைப் பொருளாப் பொதிந்தோம்பல் செல்லா
தருளைப் பொருளா வறஞ்செய்தல் வேண்டு
மருளைப் பொருளா வறஞ்செய்து வான்கண்
ணிருளிவியல் பெய்தாத தென்னோ நமர்காள்.

( ஷ, அருளுடைமை-கக, கஉ. )

கஅ தகாதுயிர்கொல் வானின் மிகாமையிலை பாவ

மவாவிலையி லுண்பான் புலால்பெருகல் வேண்டும்
புகாவலை விலங்காய்ப் பொரூஉதுபிற வூன்கொன்
றவாவிலையில் விற்பானு மாண்டருகல் வேண்டும்.

ககூ பிறவிக் கடலகத் தாராய்த் துணிற்
றெறுவதிற் சுற்ற மிலார்களு மில்லை
யறவகை யோரா விடக்கு ழிசைவோர்
குறைவின்றித் தன்சுற்றந் தின்றன ராவர்.

உ0 உயிர்க ளோம்புமி னூன்விழைந் துண்ணன்மின்
செயிர்க ணீங்குமின் செற்ற மிகந்தொரீஇக்
கதிக ணல்லுருக் கண்டனர் கைதொழு
மதிகள் போல மறுவிலர் தோன்றுவீர்.

(ஷை, புலான்மறுத்தல்—எ, அ, கூ,)

உக பொருளொடு போகம் புணர்த்த லுறினு
மருளுதல் சான்ற வருந்தவஞ் செய்ம்மி
னிருளில் கதிச்சென் றினியிவண் வாரீர்
தெருள லுறினுந் தெருண்மி னதுவே.

உஉ தவத்தின் மேலுறை தவத்திறை தனக்கல தரிதே
மயக்கு நீங்குதன் மனமொழி யொடுமெயிற் செறித
லுவத்தல் காய்தலோ டிலாதுபல் வகையுயிர்க் கருளை
நயத்து நீங்குதல் பொருடனை யனையது மறிநீ.

(ஷை, தவம்—கூ, க0.)

உ௩ எண்ணின் றியேது ணியுமெவ்வழி யானு மோடு
முண்ணின் றுருக்கு முரவோனுறை கோட்ட மின்றே
நண்ணின் றியேயு நயவாரை நயந்து நிற்குங்
கண்ணின் று காம நனிநாணுறு வாளை வீழ்க்கும்.

உ௪ சான்றோ ருவப்பத் தனிநின்று பழிப்ப காணு
ரான்றாங் கமைந்த குரவர்மொழி கோட லீயார்
வான்றாங்கி நின்ற புகழ்பாக படுப்பர் காமன்
றன்றாங்கி விட்ட கணைமெய்ப்படு மாயி னக்கால்.

உ௫ மாவென் றுரைத்து மடலேறுப மன்று தோறும்
பூவென் றெருக்கி னிணர்சூடிப புன்மை கொண்டே
பேயென் றெழுந்து பிறரார்ப்பவு நிற்பர் காம
நோய்நன் கெழுந்து நனிபாழ்படக் கொள்வ தாயி னக்கால்.

உ௬ நக்கே விலாவி றுவர்நாணுவர் நாணும் வேண்டார்
புக்கே கிடப்பர் * சனவுங்கிளை யையு மேற்பர்
துற்றான் மறப்ப ரழுவர் நனி துஞ்ச லில்லார்
நற்றோன் மினைநபெ ரிதுபாடறி துன்ப மாக்கும்.

உஎ ஆரொடு நட்டவ ரார்பசி ருந்தி
யரவொடு நட்டவ ராட்டியு முண்பர்
புரிவளை முன்கைப் புனையிழை நல்லார்
விரகில ரென்று விடுத்தனர் முன்னே.

(ஷை, புணர்ச்சிவிழையாமை-ரு—சு.)

உஅ பீடில் செய்திக ளாற்கள விற்பிறர்
வீடில் பல்பொருள் கொண்ட பயனெனக்
கூடிக் காலொடு கைகளைப் பற்றிவைத்
தோட லின்றி யுலையக் குறைக்குமே.

(ஷை, கள்ளாமை—ரு.)

உகூ பொய்யி னீங்குமின் பொய்யின்மை பூண்டுகொண்
டைய மின்றி யறநெறி யாற்றுமின்

* 'நணவுகையு மேற்பர்' எனவும் பிரதிபேதம்.



வைகல் வேதனை வந்துற லொன்றின்றிக்
கௌவை யில்லுல கெய்துதல் கண்டதே.

௩0 கல்வி யின்மையுங் கைப்பொருள் போகலு

நல்லில் செல்லல்க ளானலி வுண்மையும்
பொய்யில் பொய்யொடு கூடுதற் காகுத
லைய மில்லை யதுகடிந் தோம்புமின்.

(ஷ, பொய்யாமை—ரு, ச.)

௩௧ உலகுடன் விளங்கவுயர் சீர்த்திநிலை கொள்ளி
னிலையில்கதி நான்கினிடை நின்றுதடு மாறு
மலகிறுய ரஞ்சினுயி ரஞ்சவரும் வஞ்சக்
கொலையொழிமி னென்றுநனி கூறின ரறிந்தார்.

௩௨ வெள்ள மறவி விறல்வேந்தர் தீத்தாயங்
கள்வரென் றிவ்வாற்றிற் கைகரப்பத் தீர்ந்தகனு
முள்ளி லுறுபொருளை யொட்டா தொழிந்தவா
றெள்ளும் பெருந்துயர்நோ யெவ்வ மிகப்பவே.

௩௩ ஒழிந்த பிறவற னுண்டென்பா ருட்க
வழிந்து பிறரவாம் வம்பப் பொருளை
யிழந்து சிறிதானு மெய்தா தொழிந்தா
ரழிந்து பெருந்துயர்நோய்க் கல்லாப் பவரே.

௩௪ இன்மை யிழிவா முடைமை யுயிர்க்கச்ச
மன்னல் சிறிதாய் மயக்கம் பெரிதாகிப்
புன்மை யுறுக்கும் புரையி லரும்பொருளைத்
துன்ன தொழிந்தார் துறவோ விழுமிதே.

௧௫ ஈண்ட லரிதாய்க் கெடுத லெளிதாகி
நாண்டல் சிறிதாய் நடுக்கம் பலதரூஉ
மாண்பி லியற்கை மறுவி லரும்பொருளை
வேண்டா தொழிந்தார் விறலோ விழுமிதே. ௧௬
இல்லெனின் வாழ்க்கையு மில்லையுண் டாய்விடிற்
கொல்வர் கயவர் கொளப்படும் வீடுவ



ரில்லையுண் டாய்விடி னிம்மை மறுமைக்கும்
புல்லென்று காட்டும் புணர்வது மன்றே.

(ஷ, செல்வநிலையாமை-௧௨—௧௭.)

௧௭ வேற்கண் மடவார் விழைவொழிய யாம்விழையக்
கோற்கணை னெறிகாட்டக் கொல்கூற் றுழையதா
நாற்ப திகந்தா னரைத்தாது வந்தினி
நீத்த துணிவா நிலையா திளமையே.

(ஷ, இளமை நிலையாமை-௧௦.)

௧௮ இளமையு நில்லாவா லின்பமு நின்றவல்ல
வளமையு மஃதேபோல் வைகலுந் துன்பமெல்லா
முளவென நினையாதே செல்கதிக் கென்றுமென்றும்

விளைநில முழுவார்போல் வித்துநீர் செய்துகொண்மின்.
(ஷை, பலவகைநிலையாமை—௪.)

௩௯ மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகையவை யுள்வழிப்
பற்று விளையாய்ப் பலபல யோனிக
ளற்று முழலு மறுத்தற் கரிதே.

௪0 உற்ற வுதிர மொழிப்பான் கலிங்கத்தை
மற்றது நோய்த்துக் கழுவுத லென்னொக்கும்
பற்றினு னாகிய பாவத்தை நீட்டும்
பற்றொடு நின்று பறைக்குறு மாறே.

௪௧ தானஞ் செய்திலந் தவமு மன்னதே
கானந் நோய்தில விற்கழி வெய்தி
ஞானந் தேய்குழ னமக்குய்த லுண்டோ
மானந்தீர் கொள்கையார் மாற்றம்பொய் யல்லவாய்.
(ஷை, துறவு—அ, ௯, ௰.)

௪௨. பருவந்து சாலப் பலர்கொலென் றெண்ணி
யொருவந்த வுள்ளத் துவத்த லொழிமின்

வெருவந்த துன்பம் விடுக்குந் திறலோ
னொருவ னுலகிற் குளனென்னு மாறே.

(ஷை, மெய்யுணர்தல் — கக)

சங உய்த்தொன்றி யேர்தந் துழவுழு தாற்றவும்
வித்தின்றிப் பைங்கூழ் விளைக்குற லென்னொக்கு
மெய்த்தவ மில்லான் பொருளொடு போகங்க்
செய்ந்நுந் தேதா னிடர்ப்படு மாறே.

(ஷை, பழவினை—உரு.)

சச குலந்தருங் கல்வி கொணர்ந்து முடிக்கு
மலந்த கிளைக ளழிபசி தீர்க்கு
நிலம்பக வெம்பிய நீள்சுரம் போகிப்
புலம்பில் பொருடரப் புன்கண்மை யுண்டோ.

(ஷை, பொருள் செயல்வகை—கசு.)

சரு கெட்டே மிதுவென் னிலையென்று சார்தற்க
ணட்டவ ரல்லார் நணிமிகு பவர்சுற்றம
பெற்றது சொல்லிப் பெரிதிகழ்ந் தாற்றவு
மெட்டவந் தோரிடத் தேசி நிற்பவே.

(௸, நட்பு—கா.)

சசா தெண்ணீர் பரந்து திசைதோறும் போய்க்கெட்ட
வெண்ணிலைகொண் டிட்ட விவறுத லென்றெக்கும்
பெண்மனம் பேதித் தொருப்படுப் பன்னென்று
மெண்ணி லொருவ னியல்பென்னு மாறே.

சஎ நீண்முகை கையாற் கிழிந்தது மொக்குறு
மாண்வினைப் பாவை மறைநின்று கேட்டுறிற்
பேணலு மன்பும் பிறந்துழிப் பேதுசெய்
தாணைப் பெண்ணை யணைக்குறு மாறே.

(௸, பேதைமை—கஅ, கக.)

சஅ அந்தக னந்தகற் காறுசொல்ல யாதொக்கு
மூந்துசெய் குற்றங் கெடுப்பான் முழுவது



நன்கறி வில்லா னதுவறி யாதவர்க்
கின்புறு வீட்டி னெறிசொல்லு மாறே.

(௸, புல்லறிவாண்மை—கரு.)

௪௯ நகைநனி தீது துனிநன் றியார்க்கும்
பகைநனி தீது பணிநன்றி யாரோடு
மிகைமிகு பொருளொன் றிறக்க விலரே
வகைமிகு வானுல கெய்தி வாழ்பவே.

(ஒடு, பண்புடைமை—௭.)

௫௦ பொன்னுர் மதியார் பெருங்கிளை தானது
கொண்டவி ருகா குறிபறி வஃகுப
வெண்டறை நின்று வெறுக்கை யிலராயின்
மண்டிவர் போல்வார்தம் மகளு மொட்டார்.

௫௧ சொல்லவை சொல்லார் சுருங்குப சூழ்ந்துணர்
நல்லவை யாரு நனிமதிப் பாரல்லர்
கல்வியுங் கைப்பொரு ளில்லார் பயிற்றிய
புல்லென்று போதலை மெய்யென்று கொண்ணீ.

௫௨ தொழுமக ளாயினுந் துற்றுடை யாளைப்
பழமரஞ் சூழ்ந்த பறவையிற் சூழ்ப
விழுமிய ரேனும் வெறுக்கை யுலந்தாற்
பழமரம் வீழ்ந்த பறவையிற் போப.

௫௩ பொருளில் குலனும் பொறுமையி லன்பு
மருளி லறனு மமைச்சி லரசு
மிருளினு ளிட்ட விருண்மயி ரென்றே

மருளில் புலவர் மனங்கொண் டுரைப்ப.

(௸, நல்துறவு — ௬, ௧௦, ௧௧ ௧௨.)

௫௪ துக்கந் துடைக்குந் துகளறு காட்சிய
நிக்கந்த வேடத் திருடி கணங்களை
யொக்க வடிவீழ்ந் துலகியல் செய்தபி
னக்கதை யாழ்கொண் டமைவரப் பண்ணி.

௧௦ செந்தமிழ்.

௫௫ பண்ணுற் றிறத்திற் பழுதின்றி மேம்பட்ட
தொண்ணூற் றறுவகைக் கோவையும் வல்லவன்
விண்ணு றியங்கும் விறலவ ராயினுங்
கண்ணுறி நோக்கிக் கடுநகை செய்வான்.

(இவ்விரண்டும் சிலப்பதிகாரம், கனுத்திறழுரைத்தகாதை, அடியார்க்கு நல்லாருரை மேற்கோட் செய்யுட்கள்.)

௫௬ நீல நிறத்தனவாய் நெய்கனிந்து போதவிழ்ந்து
கோலங் குயின்ற குழல்வாழி நெஞ்சே
கோலங் குயின்ற குழலுங் கொழுஞ்சிகையுங்
காலக் கனலெரியின் வேம்வாழி நெஞ்சே
காலக் கனலெரியின் வேவன கண்டாலுஞ்
சால மயங்குவ தென்வாழி நெஞ்சே.

றிள வித்தகர் செய்த விளங்கு முடிகவித்தார்
மத்தக மாண்பழிதல் காண்வாழி நெஞ்சே
மத்தக மாண்பழிதல் கண்டால் மயங்காதே
யுத்தம நன்னெறிக்க ணில்வாழி நெஞ்சே
யுத்தம நன்னெறிக்க ணின்றாக்கஞ் செய்தியேற்
சித்தப் படாத தெளிவாழி நெஞ்சே.

(யாப்பருங்கலவிருத்தி, சூ௯ம் சூத்திரவுரை மேற்கோள்)

---